# கல்கி

KALKI 1.12.91 ரூ. 3.00
பொன்விழா ஆண்டு





## மதுரை மாநகரச் சிறப்பிதழ்

# மாதம் ஒரு நகரம்



## மதுரைக்குச் சென்று வந்தோம்; ஈரோடுக்கு வரப்போகிறோம்!

**ம**துரை -

ஆன்மிகம் வளர்க்கும் அதன் வானளாவும் கோ யி ல் கோபுரங்களைப் போலவே வேறு பல துறைகளிலும் சாதனைகள் புரிந்த நகர்.

முதல், இடை, கடைச் சங்க காலம் முதல் சமீப கால எழுத்தாளர்கள் வரை இலக்கியத் தொண்டு புரிந்தவர்கள் தான் எத்தனை பேர்!

கலைச் சிறப்பு என்று சொன்னால் மதுரை மீனாட்சி கோவிலின் சிற்ப அழகுகளுக்கு ஈடாகவோ, எம்.எஸ்ஸின் இன்னிசைக்கு இணையாகவோ உலகில் வேறு உண்டா?

தேச பக்தி-சமுதாயப் பணி என்று எடுத்துக் கொண்டால் மதுரை வைத்திய நாத அய்யர் விசுவரூபம் எடுத்து நிற்கிறார் அல்லவா?

தொழில் துறைக்கு ஒரு டி.வி.எஸ். இன்று எப்படி ஆலாக விழுது விட்டுப் படர்ந்திருக்கிறது!

இப்படி பல்வேறு துறைகளுக்கு மதுரை வ ழ ங் கி யு ள் ள பெருமக்களைப் பட்டியலிட்டாலே பல பக்கங்கள் நிறையும். எல்லோரையும் பற்றி எழுத இந்த ஓர் இதழ் போதுமா என்ன? அதனால்தான் மிகவும் பிரபலமான, ஏற்கெனவே பலரால் அறியப்பட்ட விஷயங்களைத் த வி ர் த் து, புதிய விஷயங்களை மட்டுமே சேகரித்து அளிக்க முற்பட்டோம். விளைவு, இந்த இதழ் மதுரை மாநகரச் சிறப்பிதழாக உங்கள் கரங்களில் தவழ்ந்து கொண்டிருக்கிறது. அனைவருக்கும் பொதுவான சில பிரச்னைகளைச் சொல்லியிருந்தாலும், கூடவே, வருங்காலத்தில் பிரகாசிக்கப் போகும் இன்றைய இளைய சமுதாயத்திலுள்ள நம்பிக்கை நட்சத்திரங்களையும் எடுத்துக் காட்டியிருக்கிறோம்.

**இ**னிவரும் நகர விசிட்களில் இன்னும் ஏராளமான நம்பிக்கை நட்சத்திரங்களையும் அவர்களது சாதனைகளையும் எடுத்துக்காட்ட ஆசைப்படுகிறோம்.

மதுரைக்கு அடுத்த படியாக ஈரோடு நகருக்கு வரப்போகிறோம்.

எனவே, ஈரோடு நகரிலுள்ள இளைஞர்கள், இளைஞர் சங்கங்கள் - அமைப்புகள், ரசிகர் மன்றங்கள் மற்றும் மாணவ-மாணவியர் அனைவரும் குறிப்பிட்டுச் சொல்லும் படியான தங்களது சாதனைகளையும் நற்பணிகளையும் எங்களுக்கு எழுதுவதோடு, மற்ற நண்பர்களின் சாதனைகளையும் எழுதியனுப்புங்கள்.

நாங்கள் நேரடியாக வந்து, பார்த்து, உங்களின் நற்பணிகளைக் கல்கியில் எழுதுகிறோம்.

இளைஞர்கள் மட்டும்தானே என்று பெரியவர்கள் பேசாமலிருந்து விட வேண்டாம்; அனைவரையும் எழுதியனுப்பக் கேட்டுக் கொள்கிறோம். சாதனைகளோடு, ஈரோடு நகரின் குறைகளையும் பிரச்னைகளையும் தாராளமாக எழுதியனுப்புங்கள்.

**உங்கள் அனைவரின் கடிதங்களும் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 5.12.91**

'மாதம் ஒரு மாவட்டம்' போல இந்தத் திட்டத்திற்கும் உங்களின் மகத்தான ஆதரவை எதிர்பார்க்கிறோம்.

– ஆசிரியர்.

# உசிலம்பட்டி: அதிக பெண்குழந்தைகளுக்கு என்ன காரணம்?

**நா**டு முழுக்க அந்தப் பிரச்னையை வேறு கோணத்தில் பார்த்துக் கொண்டிருக்கையில், வித்தியாசமாக அணுகி இருக்கிறார் ஓர் இளைஞர். டாக்டர் ரவிச்சந்திரன். மதுரை மருத்துவக் கல்லூரி மாணவர். அவரைச் சந்தித்தோம்.



ரவிச்சந்திரன்

**ப**டிச்சிட்டிருந்தப்போ கல்லூரி மருத்துவமனைக்கு வரும் உசிலம்பட்டிக்காரர்களுக்குச் சிகிச்சை அளிக்க, பேசிப் பழக என சந்தர்ப்பம் கிடைத்தது. மக்கள் அங்கு ஆண் குழந்தைகளை வைத்துக் கொண்டு, பெண் குழந்தைகளை வலுக் கட்டாயமாகக் கொன்று கொண்டிருந்தார்கள். ஆண்டுக்கு, கருவிலேயே சுமார் ஏழாயிரத்து ஐநூறு பெண் குழந்தைகளும், வளர்ந்தபின் சுமார் நாலாயிரம் குழந்தைகளும் கொல்லப்படுகின்றன. உண்மை!

பத்திரிகைகள் இதைப் பரபரப்புச் செய்தியாக்கின. பெண்கள் அமைப்புக்கள் குரல் கொடுத்தன. அரசாங்கம் தடுப்பு நடவடிக்கையில் இறங்கிற்று. யுனிசெஃப் நிறுவனம் முன்வந்து 'பெண் குழந்தைகளை அழிக்காதீர்கள்; நாங்கள் தத்து எடுத்துப் பராமரிக்கிறோம்' - என்றது.

விஷயம் சமூகப் பிரச்னையாகப் பிரதானப்படுத்தப்பட்டது.

என்னைப் பொறுத்தவரை எல்லோர் பார்வையும், அணுகுமுறையும் வரவேற்கப்பட வேண்டியதே. பாராட்டப்பட வேண்டியதே! ஆனால் இதை சமூகப் பார்வையுடன் மட்டுமே பார்ப்பது, அணுகுவது என்பது சரியா? அது தாற்காலிகத் தீர்வை மட்டுமல்லவா பெற்றுத் தரும்? எனில் நிரந்தரத் தீர்வு எது?

செயல்பட்டேன். மருத்துவக் கல்லூரி நிர்வாகத்திடம் தெரிவித்தேன்.

**உ**சிலம்பட்டி மட்டுமல்ல; மதுரையைச் சுற்றி செக்கானூரணி, சோழவந்தான், சேடப்பட்டி, எழுமலை, கருமாத்தூர், திருமங்கலம் போன்ற பல பகுதிகளில் - சுற்று வட்டாரத்தில் 'மலர்வளையம்' - போன்று இந்தப் பெண் சிசுக் கொலைகள் நிகழ்கின்றன என்ற வேதனையான முதல் உண்மை தெரிய வந்தது. குறிப்பாக உசிலம்பட்டி.

முதல் கேள்வி : இந்த ஊரின் பிறப்பு சதவீதம் என்ன?

அரசாங்க அலுவலகத்திடம் போய் நின்று, மறுபடி போய் நின்று... ஆண்கள் ஆயிரம் என்றால் பெண்கள் ஆயிரத்து ஐநூறு என அறிய முடிந்தது. இது பதிவான சதவீதம். மேலும் முனைந்ததில் பதிவு செய்யப்படாத, கொல்லப்படும் பெண் குழந்தைகளையும் சேர்த்தால் ஆயிரம் - ஆயிரத்து எண்ணூறு என்று விகிதத்தை சரியாகக் கணக்கிட முடிந்தது. நேபாளத்தின் 'கேட்டு' பகுதிகள் - சோவியத் ரஷ்யாவின் உக்ரேன் பகுதியை விட இங்குதான் அதிக அளவு பெண் குழந்தைகள் பிறப்பதான உண்மை தெரிய வந்தது.

ஏன்? தூக்கம் தொலைந்து போயிற்று. ஏன்? ஏன்?

தேட ஆரம்பித்த போது பெரிய புதிரின் சின்னச் சிக்கல் முதலில் அவிழ்ந்தது. என் ஆர்வத்தையும், கண்டறிந்த உண்மைகளையும் யுனிசெஃப் நிறுவனத்திடம் தெரிவித்து உதவக் கேட்டேன். அவர்கள் WORLD HEALTH ORGANISATION க்குச் சிபாரிசு செய்தார்கள். பலன் கிடைத்தது. பாராட்டி, ஊக்கப்படுத்திக் கடிதம் வந்தது. சின்னச் சாதனைதான் என்றாலும் உற்சாகப்பட்டேன்.

நான் அறிந்து, நிருபித்த முதல் உண்மை : இந்த ஊரின், ஆண்கள், பெண்கள் இருபாலாரும் கள்ளச் சாராயம் குடிக்கிறவர்கள். கள்ளச் சாராயம் குடிப்ப

தால் கல்லீரல் பாதிக்கப்படுகிறது. அத னால் கருப்பையும் பாதிக்கப்படுகிறது என்பது.

மற்றும் வேறென்ன சுபாவங்கள், நோய்கள் இந்தப் பகுதியில் இருக்கின்றன? ஆராய்ந்த போது திடுக்கிடும் தொடர் விவ ரங்கள் கிடைக்க ஆரம்பித்தன.

அதைப் பட்டியலே போடலாம்.

அயோடின் சத்துக் குறைவால் தைராய்டு பாதிக்கப்பட்டவர்கள் பலரைச் சந்திக்க நேர்ந்தது. இந்தப் பகுதியில் ஐந்து நாட்களுக்கு மேற்பட்ட மாதவிலக்குத் தொல்லைகளுக்கு உட்படும் பெண்கள் அதிகம். கருத்தடை மாத்திரையின் உபயோ கம் வெகு அதிகமாக, வெகு சகஜமாகி விட்டது இங்கு. அதன் எதிர்விளைவு களைப் பற்றி மருத்துவத் துறையைச் சார்ந்தவர்கள் அறிவார்கள். கருப்பை காச நோய் (ENDO METRIAL TUBER CULOSIS), ஒரு விதமான பால்வினை நோய் (NON-VENEREAL SYPHILIS).

கூட்டுக் குடும்பங்களில் நிலவும் தவ றான தொடர்புகள்; நெருக்கமான உறவில் திருமணங்கள்; அடிக்கடி கருக்கலைப்பு; முறையற்ற கருக்கலைப்பு என தேடிப் பிடித்த உண்மைகளைப் பட்டியலிட்டு, என் சந்தேகங்களையும், கண்டுபிடிப்பு களையும் உடனுக்குடன் WHO க்கு அனுப் பினேன். அவர்கள் அதை உலகின் பல பகுதிகளிலுமுள்ள ஆராய்ச்சி மையங் களுக்கு அனுப்பி உறுதிசெய்து, அல்லது தெளிவுபடுத்தி விவரங்கள் அனுப்பித் தந்தார்கள். அது நான் போகும் திசையை நோக்கி என்னை மேலும் தூண்டிற்று.

அனுமதி பெற்று ஒருசில நோயாளி களைத் தேர்ந்தெடுத்து, அவர்கள் உதவி யையும் ஒத்துழைப்பையும் வேண்டிப் பெற்றேன்.

அமெரிக்க மருத்துவ அறிஞர் லேன்ட்ரம் செட்டில்ஸ் தியரிப்படி ஆண் உயிரணு, பெண் உயிரணு என தனித்தனி யாக இருப்பதை அறிவோம். நான் முன்பே பட்டியலிட்ட பல்வேறு விதமான காரணம் களால் கருப்பை மாற்றம், பாதிப்பு ஏற் படும் உசிலம்பட்டிப் பகுதி பெண்களின் உட்புற வேதியல் மாற்றம் பெண் உயி ரணுவை அதன் வேகத்தைத் தூண்டிக் கருவை அடைந்து வெற்றி கொள்ள வைக் கிறது என்கிற உண்மையைப் புரிந்து எடுத் துரைத்தேன்.

WHO வரவேற்று வாழ்த்தியது. சர்வ தேச அளவிலான இந்தப் புது முயற்சிக்கு, ஆராய்ச்சிக்கு உதவ மேலும் முன்வந்தது. தமிழகத்தின் பல பகுதிகளுக்கும் சென்று வரத் தலைப்பட்டேன்.

ஆனாலும் இது தனிமனித முயற்சி யல்ல. அரசாங்கம், பொது மக்கள், அறி ஞர்கள் என எல்லோரும் முன்வந்து, ஒருசேர முயல வேண்டிய காரியம். மக்கள் தங்கள் கெட்ட பழக்கங்களைக் கைவிட்டு, மாறி, தகுந்த சிகிச்சை, மருந்துகள் என எடுத்துக் கொண்டு.. இது மெதுவானதாக இருக்கலாம். ஆனால் நிரந்தரமானது. விவேகமானது. அரசாங்கத்தின் கதவுகளை நான் தட்டிப் பார்த்தாயிற்று. இனி அவர்கள் முறை. முழு உத்வேகத்துடன் நடவடிக்கை எடுக்க முன்வருவார்களா? காத்திருக்கிறேன்.

– சுந்தர்ஜி

---

## போலீஸ் ஒயர்லெஸ்ஸில் திருக்குறள்!

**போ**லீஸ் ஒயர்லெஸ் கருவியில் திருக்குறளுக்கான விளக்கம் ஒலிபரப்பப் படுமா? படுகிறது. மதுரை போலீஸ் ஒயர் லெஸில் காலை ஏழு மணிக்கு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு திருக்குறளுக்கு விளக்கம் தரப்படுகிறது. தருபவர் ஒரு குப்பைக் கவிஞர்!

ஆம்; தம்மை அப்படியோர் அடை மொழியில் அழைப்பதையே பெருமை யாகக் கருதுகிறார் மதுரை நகரக் காவல் உதவி ஆணையாளராகப் பணியாற்றும் வாசு கணபதி. காரணம், தமக்கிருக்கும் தமிழ்ப் பற்றுத்தான் என்கிறார்!

இவர் சப்-இன்ஸ்பெக்டராகப் பணி யாற்றிய போது யாப்பிலக்கணத்தை முழு மையாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக தமிழ் எம். ஏ. படித்தார். பிறகு தமது துறையின் சிறப்பு அனுமதி யின் பேரில் இப்போது டாக்டர் பட்டத்திற் கான ஆராய்ச்சியை மதுரை காமராசர் பல் கலைக் கழகத்தில் சமர்ப்பித்திருக்கிறார். ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தலைப்பு 'வரதட்சணைக் குற்றங்களும் தமிழ்க் கதை இலக்கியமும்' என்பது.

''கடந்த பத்தாண்டுகளில் வெளியான சிறுகதைகளில் 29 சிறுகதைகளும் பதி னோரு நாவல்களும்தான் வரதட்சணைப் பிரச்னையை மையமாகக் கொண்டு எழுதப்பட்டிருக்கின்றன. ஆக, யதார்த்தத் துக்கும் படைப்பிலக்கியத்துக்கும்தான் எத்தனை இடைவெளி?'' என்று ஆச்சரியப் படுகிறார்.

இவர் கவியரங்குகளில்தான் கலந்து கொள்கிறார் என்பதில்லை; அவ்வப்போது மீனாட்சி கோயிலில் ஆன்மீகச் சொற் பொழிவும் செய்து கொண்டிருக்கிறார் இந்தக் காக்கிச் சட்டைக்காரர்!



☛ குப்பைக் கவிஞர்

# விஜியின் சோகக் கதை...

மிதமான வெளிச்சத்தில் அந்தப் பெண்ணைப் பார்த்தோம்; ரயிலடியின் முன்புற வாகனப் பரப்பில் சற்றே சோம்பலாய் இயங்கிக் கொண்டிருந்த நகரத்தின் கும்பலின் ஒரு திவலையாக.

ஸ்கூட்டரை நிறுத்திப் பூட்டிக் கொண்டிருந்த நடுத்தர வயது மனிதரிடம் அணுகிக் கையேந்துவது தெரிந்தது. அவர் பர்ஸ் எடுத்துப் பிரித்துச் சில்லறை தேடுகையில், அவரின் தாராள நிதி நிலை புரிந்து பேச... அவர் எதுவோ சொல்லிச் சீறுவது புரிந்தது.

''ச்சீ! போ அந்தாண்டை.''

காசும் போடாமல் விலகத் தலைப்பட்டவரைப் பார்த்து எதுவோ கெட்ட வார்த்தைகளை உதிர்த்தாள் அந்தச் சிறுமி.

நாம் அந்த நடுத்தர வயதுக்காரரை அணுகி விசாரித்தோம். ''காலம் சார். பதினொரு வயசு இருக்குமா? பொண்ணுங்க இருக்காம். வேணுமான்னு கேக்குது சார்!''

நமக்கு ஏற்பட்ட அதிர்ச்சியையும் மீறி அந்தச் சிறுமியைச் சந்திக்க முயன்றதில்....

இந்த உலகம் இனியது. வான் இனியது. காற்றும், மலையும், முகடும், பனியும், பூவும் என்று எல்லாம் அழகுடையன - சித்தியைத் தவிர!

விஜிக்கு சித்தியின் நினைவு வந்ததும் மறுபடி வலியை உணர முடிந்தது. கைகளில், தொடைகளில் எனப் பட்டிருந்த சூடுகளின் இன்னும் ஆறாத காயங்கள்.

வலியோடு மெல்ல நடந்தாள். திருப்பங்கள். பரபரப்பான சாலைகள். பெரும்பாலானோர் அவளைப் பொருட்படுத்தவில்லை. காகிதம் பொறுக்கிக் கொண்டிருந்த ஒரு சிறுவன் அவளை அணுகி, ''ஊருக்குப் புதுசா?'' - என்று கேட்டான்.

☛ ஜேம்ஸ்



☛ உயரமாக இருப்பவள்தான் விஜி



விஜி பதில் சொல்லாமல் ஓடி, ஒரு கடையில் நிழலில் ஒதுங்கிக் கொண்டாள். அவளுக்கு நகரம் பிரமிப்பாக இருந்தது. பயமாகவும் இருந்தது. சித்தியின் கொடுமைக்குப் பயந்து ஊரை விட்டு ஓடி வந்தவளுக்கு இங்கே வேறு வித பயம்.

பசி வயிற்றைப் பிசைந்தது. என்ன சாப்பிடுவது? எங்கே தங்கிப் படுப்பது? தென்பட்ட வீடுகளை

அனுகி, ''வேலை கிடைக்குமா?''

படக்கென்று கதவு சாத்தினார்கள்.

''இப்படித்தான் பரிதாபப்பட்டு, செம்பகம் வீட்டில வெள்ளி தம்ளர் காணாம போச்சு.''

பசி. உயிர் வாழ வேண்டும் என்ற துடிப்பு. இரண்டும் விஜியை போகக் கூடாத இடத்துக்குப் போக வைத்தன. செய்யக்கூடாத காரியங்களைச் செய்ய வைத்தன. இந்த வாழ்க்கை அவளுக்குப் பழகி விட்டது.

ஒரு நாள், ''டிக்கெட் வேணுமா? ஐந்து ரூபா டிக்கெட் பத்து ரூபா'' - விற்றுக் கொண்டிருந்த ஒரு சிறுவன் இவளைப் பார்த்துப் புன்னகைக்கத் தலைப்பட்டான். அப்போதுதான் விஜிக்கு தன்னையொத்த பலர் ஆங்காங்கே இருப்பது புரிந்தது. ஷூ பாலீஷ் போட்டுக் கொண்டு, காய்கறிக் கடைகளில் கூடை தூக்கிக் கொண்டு, சூட்கேஸ் சுமை தூக்கி... எல்லாரும் அநாதைகள். அவர்கள் எங்கே தங்குகிறார்கள்? எப்படி? கொஞ்சம் கொஞ்சமாகப் பேசிப் பழக, 'நண்பன்' என்ற அமைப்பு பற்றி அறிந்து கொண்டாள்.

அன்பு செலுத்த இந்த நகரில் ஒரு அமைப்பு இருக்கிறதா? நாமும் அங்கு தங்கியிருக்க முடியுமா? இந்த அவல வாழ்க்கையிலிருந்து விடுபட்டுப் புது வாழ்வு தொடங்குவது சாத்தியமா? சென்றாள். ஏற்றுக் கொள்ளப்பட்டாள். அவள் புதிய விலாசம் இது.

**வி**ஜியைப் பின்பற்றி அவள் தங்கியிருக்கும் 'நண்பன்' அமைப்புக்கு நாமும் சென்று பார்த்தோம். கூடம் முழுக்கச் சிறுவர்கள். கவிழ்ந்து படுத்துக் கொண்டு, எழுதிக் கொண்டு, பேசிக் கொண்டு, டீ.வி. பார்த்துக் கொண்டு... ப்ரதர் ஜேம்ஸ் நம்மை வரவேற்றார்.

''மதுரை நகரத் தெருக்களில் இப்படி நூற்றுக்கணக்கான சிறுவர்களை நீங்கள் பார்க்கலாம். ஆதரவற்ற இவர்கள் உலகம் தனியானது. வெகுஜனப் பார்வையின் கரிசனம் படியாத சோகமானது. இவர்களின் நலன் கருதித் துவக்கப்பட்டதுதான் 'நண்பன்' அமைப்பு.''

விவரித்தார்.

''பொதுவாக இவர்கள் கிராமங்கள் மற்றும் புறநகர்ப் பகுதிகளிலிருந்து ஏழைமை, கொடுமை, தாய் தந்தையின் தகாத உறவு, அதிக கண்டிப்பு, கட்டுப்பாடு இல்லாத நிலை, படிப்பில் தோல்வி, நகர வாழ்க்கையில் மோகம் ஆகியவற்றால் நகரங்களுக்கு ஓடி வருகிறார்கள். இவர்களின் பகல் வாழ்க்கை எப்படியோ ஓடி விடுகிறது. ஆனால் இரவு? அதுதான்



☛ நண்பன் அமைப்பில் சிறுவர்கள்...

இவர்கள் வாழ்க்கையின் திசையை மாற்றும் பகுதியாகி விடுகிறது. போலீசின் பார்வை பயத்தையும், ஒதுங்கிப் போனால் சமூக விரோதிகளின் பரிச்சயமும் கிட்டுகிறது.''

நாம் கேட்டுக் கொண்டோம்.

''போதை மருந்துப் பழக்கங்கள், திருடுதல் என ஆரம்பித்து, பிறகு வேறு பல குற்றங்களுக்கும் துணைபோக வழிகாட்டுகிறது. எனவேதான் எங்கள் அமைப்பின் முதல் கடமையாக தெருவோரச் சிறுவர்களும், சிறுமியர்களும் தனித்தனியே இரவு வந்து தங்கிக் கொள்ள இரு இல்லங்களை உருவாக்கியிருக்கிறோம்.

''அப்புறம்?''

''பிறகு மெதுவாக அவர்களிடம் பழகி, பரிச்சயப்படுத்திக் கொண்டு, நம்பிக்கை ஏற்படுத்தி முழு விவரம் சேகரிப்போம். பெற்றோர்களிடம் ஒப்படைக்க முயலுவோம். அது சாத்தியப்படாத நிலையில் எங்கள் அணுகுமுறை அடுத்த கட்டம்.''

''அறிவுரை சொல்லி நெறிப்படுத்துவதா?''

''நேரடியாக அந்த முயற்சியில் இறங்கினால் யாரும் இங்கே எட்டிப் பார்க்கவும் மாட்டார்கள். அதனால் முதலில் அவர்களுக்குச் சின்னச் சின்ன நல்ல பழக்கங்களை

இயல்பாகக் கற்றுக் கொடுப்போம். பல் துலக்குவது, குளிப்பது, மாற்றுடைகள், சுத்தம்... என்று.''

''பிறகு?''

''எழுதப் படிக்க கற்றுக் கொடுப்பது. கொஞ்சம் சமன்படுத்தியதும் நல்ல வேலைகளாக எடுத்துச் சொல்லி, புரிய வைத்து உழைத்துச் சம்பாதித்த பணத்தை சேமிக்கக் கற்றுக் கொடுக்கிறோம். சேமிப்பை ஊக்குவிக்க இருபத்தைந்து ரூபாய் சேமித்தால் எங்கள் சார்பாக மேலும் ஒரு தொகையை வழங்குகிறோம்.''

இடைவெளி விட்டார் ஜேம்ஸ்.

''எங்களுக்கிருக்கும் சொற்ப வசதியைக் கொண்டு எங்களால் செய்ய முடிகிற காரியம் இவ்வளவுதான். சுமார் எழுநூறு சிறுவர்களை இப்படிக் கண்டறிந்து நல்வழி காட்டுகிறோம். எல்லோருக்கும் முழு நேர உணவளித்துப் பராமரிப்பது இன்றைய நிலையில் எங்களுக்கு அசாத்தியம். அதனால் சில நெருடல்களை சகித்துக் கொண்டு தான் போக வேண்டி இருக்கிறது.''

''என்ன நெருடல்?''

''அவர்கள் பாதை மாறுவது உடனடியாக நடப்பதில்லை. அடிக்கடி திசை தப்பிப் போகிறார்கள். பழைய சகவாசம் அழைக்கிறது; சில சமயம் மிரட்டுகிறது. எடுத்துச் சொல்லி, தைரியம் அளித்து மீட்டு வர வேண்டும். திரும்பத் திரும்ப...''

விஜியை அழைத்து வரச் செய்தார் ஜேம்ஸ். எங்கள் எதிரே கேட்டார் : ''இந்த மாதிரி வேலை பண்றியே, தப்பாப் படலையா?''

மௌனமாக இருந்தாள். அந்த மௌனமே அவள் வெட்கப்படுவதையும் திருந்த முயற்சி செய்வதையும் உணர்த்தியது.

அவள் மீது திணிக்கப்பட்ட இந்த வாழ்க்கையில், 'நிழல் பெண்'களிடமிருந்து தேவையான தொகை கமிஷனாகக் கிடைத்தது. அவர்களுடன் பேசி, மது அருந்தி, கஞ்சா புகைத்து, போலீஸ் வந்தால் ஓடித் தகவல் தந்தபடியே மறைந்து... இப்போது நண்பனின் உதவியால் எழுதக் கற்றுக் கொள்ளத் துவங்கி இருக்கிறாள். பீடி ஊதுவது தவறு என ஒத்துக் கொண்டு அமைதி கடைப்பிடிக்கிறாள்.

''கொஞ்சம் கொஞ்சமாகத் திருத்தி விடுவோம்!'' என்று நம்பிக்கையோடு பேசினார் ஜேம்ஸ்.

அந்த நம்பிக்கையில் நூற்றுக்கணக்கான அநாதைகளின் எதிர்காலம் விடியலாகத் தெரிந்தது.

- சாரு

## பொன் விழா ஆண்டு :: தங்க நகைப் பரிசுத் திட்டம் - 10

### பொங்கிய சிரிப்பு



தீபாவளியும் கார்த்திகையும் முடிந்தன; திரும்பிப் பார்த்தால் பொங்கல் வந்து விடும். கடந்த பல ஆண்டுகளில் பொங்கல் தினத்தன்று அல்லது போகி, மாட்டுப் பொங்கலையொட்டி நடந்த சிரிப்புச் சம்ப வத்தை ஒரு தபால்கார்டில் எழுதி அனுப் புங்கள். சிறந்த சிரிப்புக்குப் பரிசு பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறு மானமுள்ள பொன் நகை. பிரசுரமாகும் இதர துணுக்குகளுக்குச் சன்மானம். ''பொங்கிய சிரிப்பு'' என்று தலைப்புத் தந்து, ''கல்கி காரியாலயம், சென்னை 32'' என்ற விலாசத்துக்கு மட்டுமே எழுதி அனுப்பக் கடைசி தேதி 9.12.91



கல்கி



# BALU JEWELLERS ACCEPT FIXED DEPOSITS

| | | |
|---|---|---|
| Period | : | 1 Year and above |
| Rate of Interest | : | 21% per annum |
| Amount of Deposit | : | Rs. 5000/- and above |
| Interest payable | : | Monthly |

For details call on:



**Balu Jewellers**

**GROUP CONCERNS**

**Mfrs. DIAMOND, GOLD & SILVER**

72, USMAN ROAD, T. NAGAR,
MADRAS–600 017
PHONE : 441812, 441741

**Invest For Your golden future.**

Yoga–Savith

# கோஷ்டி

# மதுரை மாநகர அரசியல்

மதுரை அரசியலே தனிதான். தேசிய அளவில் மகாத்மா காந்தி அரையாடை உடுத்த ஆரம்பித்த நிகழ்ச்சியிலிருந்து தமிழ் நாட்டு அரசியலிலும் பல முக்கிய நிகழ்ச்சிகள் மதுரையில்தான் நடந்திருக்கின்றன. காமராஜரைத் தேசியத் தலைவர் அந்தஸ்துக்கு உயர்த்தியது திருப்பரங்குன்றத்தில் நடந்த காங்கிரஸ் மாநாடுதான். அ. இ. அ. தி. மு. க. என்கிற கட்சி உருவான இடமாக மதுரையைச் சொல்லலாம். 72ஐ ஒட்டி மதுரையில் நடந்த தி.மு.க. மாநாட்டில் தான் கருணாநிதிக்கும் எம். ஜி. ஆருக்கும் சில பிரச்னைகள் ஏற்பட்டன. எம். ஜி. ஆர். தி. மு. க. விலிருந்து வெளியேற்றப்பட்டார். மதுரையில் பிரதானமான பகுதியான ஜான்சி ராணி பார்க் அருகில் அ. தி. மு. க. வுக்கென்று தனிக் கொடியாக தாமரைக் கொடி பறந்தது. (அதிகாரபூர்வமான கட்சிக் கொடி உருவாகு முன்பே). எம். ஜி. ஆர். மதுரை மேற்கு, ஆண்டிப்பட்டி என்று மதுரை மாவட்டத்திலுள்ள தொகுதிகளில் தான் போட்டியிட்டார். உடல் நலம் குறைந்து அமெரிக்கா போய் வந்த பிறகு, மதுரையில் நடந்த 'எம்.ஜி.ஆர். மன்ற மாநாட்டில்'தான் - ஜெயலலிதாவுக்குச் செங்கோலை அளித்தார் எம். ஜி. ஆர். அந்த மாநாட்டில்தான் கட்சித் தொண்டர்கள் கத்தி வைத்துக் கொள்ளத் தனியாக 'அட்வைஸ்' வேறு பண்ணினார். அதிலிருந்து அ. தி. மு. க.வின் கோட்டை மாதிரி ஆகிப் போனது மதுரை.

அ. தி. மு. க. பிரிந்து, ஜா, ஜெ அணிகளானதும் அவை, தனித்தனியாக முதல் கூட்டத்தை - மதுரையில்தான் நடத்தின. ஜானகிராமச்சந்திரன் ஆண்டிப்பட்டியில் போட்டியிட, ஜெயலலிதா போடியில் நின்று எம். எல். ஏ. ஆனார்.

தி. மு. க. வைப் பொறுத்தவரை - ஜனதா ஆட்சிக் காலத்தில் இந்திரா காந்தி மதுரைக்கு வரும் போது கறுப்புக் கொடி என்கிற பெயரில் நடந்த வன்முறை குறித்த விசாரணை வழக்கு இன்னும் முடிந்த பாடாக இல்லை. அந்தச் சம்பவத்தில் இந்திரா காந்தி மீதான தாக்கு தலைத் தன்னுடம்பில் தாங்கிய நெடுமாறன், ''மை... சன்...'' என்று இந்திராவால் அழைக்கப்படுமளவுக்கு அவரது நம்பிக்கையைப் பெற்றார். ஆயினும் இ. காங்கிரஸிலிருந்து தனியாகப் பிரிந்து, தமிழ்நாடு காமராஜர் காங்கிரஸ் ஆரம்பித்து, ஈழப் பிரச்னைக்காக நடைப் பயணம் போய், தமிழர் தேசியக் கழகத்தைத் துவங்கி - ராஜீவ் காந்தி கொலைக்குப் பிறகு அவரது நடவடிக்கைகளைப் பொறுத்தவரை மௌனம்தான் என்றாகி விட்டது.

வன்முறை கலந்த அரசியல் - மதுரை முத்து காலத்தில் ஆரம்பித்த பின்தான் தமிழ்நாட்டில் அவர் மாதிரி பலர் உருவானார்கள். எந்த அரசியல் நிகழ்வுக்கும் உடனடியாக எதிர்வினை காட்டும் மதுரையின் தற்போதைய அரசியல் நிலவரம் என்ன?

''இப்போது மதுரை மாவட்டத்தி

◄ ஜெ. வுக்குச் செங்கோல்..... படம் : கபா



விருந்து தனியாக அமைச்சர் இல்லாததால் (நெடுஞ்செழியன் தேனி தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தாலும் கூட, அவரை மதுரை மாவட்ட வாசியாகப் பலரும் கருதவில்லை) சபாநாயகர் சேடப்பட்டி முத்தையாவின் ஆதிக்கம்தான் அதிகம். அவரது சிபாரிசின் பேரில்தான் எல்லா நியமனங்களும் நடக்கின்றன. நகரச் செயலாளரான ராஜன் செல்லப்பாவுக்கும்,





☛ சேடப்பட்டி முத்தையா ☛ ராஜன் செல்லப்பா

இளைஞர் அணிப் பொறுப்பு வகிக்கும் ஜக்கையனுக்கும் இடையில் மோதல் நடக்கிறது. எஸ். டி. எஸ். ஒருவரையும், சேடப்பட்டி முத்தையா ஒருவரையுமாக ஆதரித்துக் கொண்டிருக்கிறார்கள்.

''மதுரை புறநகர் மாவட்டச் செயலாளராக இருந்த தேனி பன்னீர் செல்லம் முன்பு ஜானகியம்மாளை எதிர்த்து ஆண்டிப்பட்டியில் நின்றவர். போடியில் இப்போதைய முதல்வர் போட்டியிட்ட போது நடராஜனுக்கு நெருக்கமானவர். ஆனால் அந்தப் பழக்கத்தையெல்லாம் துஷ்பிரயோகம் செய்யும் விதத்தில் நடந்து கொண்டதாலேயே நீக்கப்பட்டு, அவருடைய இடத்தில் மேலூர் பரசிவம் நியமிக்கப்பட்டிருக்கிறார். கட்சியில் இந்த மாதிரி களையெடுப்பு நடப்பது அவசியமான ஒன்று'' என்கிறார் அ. தி. மு. க. வில் உள்ள நகர முக்கியஸ்தர் ஒருவர்.







ஜான் மோசஸ் ☛ ராம்பாபு எம்.பி. ☛ மு. க. அழகிரி

**அ.** இ. அ. தி. மு. க. கட்சி நியமனங்களைப் பார்த்தால் 'முன்னாள் நமது கழக ஆட்களுக்கு' முக்கியத்துவம் தரப்பட்டிருப்பதை உணர முடியும். எம். ஜி. ஆர். காலத்தில் நகரப் பொறுப்பில் இருந்த





☛ தேனிபன்னீர் செல்வம் ☛ பொன் முத்துராமலிங்கம்

பழக்கடை பாண்டியன், பெரியகுளம் தொகுதி முன்னாள் எம்.பி.யான செல்வேந்திரன் போன்றவர்களுக்கு எந்தப் பதவியும் இல்லை. எம். ஜி. ஆர். இறக்கு முன்பு தமிழ்நாடு முழுக்கக் கட்சியின் நிலைமை குறித்து ஆய்வு செய்த குழுவில் இருந்த - ஜெயலலிதாவுக்கு ஆரம்ப காலத்திலிருந்து ஆதரவாளராக இருந்த - நவநீத கிருஷ்ணன் போன்றவர்கள் கூட இப்போது ஓரங் கட்டப்பட்டிருக்கிறார்கள்.

**தி.** மு. க. வின் நிலைமை இன்னும் விசேஷம். மாவட்டச் செயலாளரான, முன்னாள் அமைச்சர் பொன். முத்துராமலிங்கத்துக்கும், பி. டி. ஆர். பழனிவேல் ராஜனுக்கும் இடையில் சுமுகமான உறவு இல்லாததால் எத்தனை விதமான குழுக்கள்? சமீபத்திய தி.மு.க. ஆட்சியில் பலவிதமான அதிகாரங்களுடன் இருந்து கொண்டிருந்த மு. க. அழகிரி, ஆட்சிக் கவிழ்ப்புக்குப் பிறகு மௌனமாகி, இப்போது நெருக்கடியான பிரச்னை ஒன்று உருவானதில் மேலும் தர்மசங்கடத்துக்குள்ளாகியிருக்கிறார்.

மதுரை நகர இ. காங்கிரஸில் கோஷ்டிகளுக்கும், சண்டைகளுக்கும் பஞ்சமில்லாத நிலை. இ. கா. மாவட்டத் தலைவர், கே. எஸ். கோவிந்தராஜன் வாழப்பாடி ராமமூர்த்தி ஆதரவாளர். மூப்பனார் ஆதரவாளராக ராம்பாபு எம். பி. இவர்கள் இருவரும் அடிக்கடி உஷ்ணமான அறிக்கைகளைக் கொடுத்துக் கட்சிக்காரர்களை அவ்வப்போது 'குஷி'ப்படுத்துவார்கள்.

**அ**ந்தக் கால ஜனதாவிலிருந்து, இப்போது ஜனதா தளத்தின் மாநிலச் செய

☛ நெடுமாறன் ☛ பி. டி. ஆர். பழனிவேல்ராஜன்





லாளர்களில் ஒருவரானவர் ஜான்மோசஸ். ''ஆளும் கட்சியைப் பொறுத்தவரை பல விதத்தில் பொது மக்களிடம் அதிருப்தி உருவாகியிருக்கிறது. இங்குள்ள ஆளுங் கட்சி அரசியல்வாதிகள் அமைச்சர்களை வரவேற்றுப் போஸ்டர்கள் போடுவதைத் தவிர ஒன்றும் செய்வதில்லை. எதிர்க்கட்சி களும் இப்போதுதான் ஆளுங்கட்சியை விமர்சிக்க ஆரம்பித்திருக்கின்றன. இனி போகப் போகத்தான் அரசியல் சூடு பிடிக்கும்'' என்கிறார் மோசஸ்.

– அகிலா

---

# கோவில் திருப்பணியிலும் அரசியல்!



பழனியப்ப பிள்ளை    பி. டி. ராஜன்

மதுரை மீனாட்சியம்மன் கோயில் திருப்பணியிலும் 'அரசியல்' புகுந்து, திருப் பணிக் குழு கலைக்கப்பட்டு, வேலைகள் மந்தமடைந்திருக்கின்றன.

திருப்பணியில் அனுபவஸ்தரான எண் பத்தி நான்கு வயதான பழனியப்ப பிள்ளை யைச் சந்திக்கிறோம். மீனாட்சியம்மன் கோவிலின் உள்ளே அமைந்திருக்கிற திரு வள்ளுவர் கழகத்தின் நிறுவனர். பல விஷ யங்களை நினைவுகூர்ந்தார் :

''முதலில் 62-ல் இந்தக் கோவிலில் கும்பாபிஷேகம் நடத்தினோம். திருப் பணிக் குழுவுக்கு பி. டி. ராஜன் தலைவர். நான் உறுப்பினராக இருந்தேன். அதற்கு முன்பு ரொம்ப வருஷங்களாகக் கும்பாபி ஷேகம் நடக்காததால் கோபுர சிலைக ளெல்லாம் பழுப்பேறிக் கிடந்தன. அதை யெல்லாம் பெயிண்ட் அடித்துப் புதுப்பித் தோம். பக்தவத்சலம்தான் அன்று முதல் வர், எந்த அரசியல் தலையீடும் இல்லை. சுதந்திரமாகச் செயல்பட்டோம். அந்தத் திருப்பணிக்கு அப்போதே 25 லட்சம் ரூபாய் செலவழித்தோம். 'திருப்பணிக் குழு உண்டியல்' என்று தனியாக வைத் திருந்தோம். நகைகள், வைரங்களையெல் லாம் அதில் போடுவார்கள் ஜனங்கள். அந்த அளவுக்கு ஈடுபாடு இருந்தது. பிறகு, மீனாட்சியம்மனுக்கு 12 லட்சம் ரூபாய் செலவில் வைரக் கிரீடம் செய்தோம். இப் போதுள்ள ஆயிரங்கால் மண்டபம் வெளவால்களெல்லாம் சேர்ந்து அழுக் கடைந்து கிடந்தது. அதைச் சுத்தப்படுத்தி மியூசியம் ஆக்கினோம். இப்போது தின மும் ஐநூறு ரூபாய் வரை வருமானம் வருகிறது.

''74-ல், நாராயணன் செட்டியார் தலை மையில் திருப்பணிக் குழு அமைந்தது. இவ்வளவு டூரிஸ்டுகள் வரக்கூடிய கோவி லைச் சுற்றி அசிங்கமாக இருந்ததால், அவரே சொந்தச் செலவில் வேலி போட் டார். இப்போது திரும்பவும் கும்பாபி ஷேகம் நடத்தத் தீர்மானித்து 59 பேர் அடங்கின திருப்பணிக் கமிட்டியை நியமித் தார்கள். ஒரு கோடி ரூபாய் செலவில் திருப்பணி நடத்தத் திட்டமிட்டிருந்தோம். வேலைகள் துவங்கிய நிலையில் ஜெய லலிதா ஆட்சி வந்ததும் கமிட்டியைக் கலைத்து விட்டார்கள்.''

கோவிலைப் பற்றி மிகவும் நெருக்க மான உணர்வுடன் பேசும் பழனியப்ப பிள்ளை சொல்லும் இன்னொரு தகவல்.

''62லிருந்தே இந்தக் கோவிலில் தமி ழில் அர்ச்சனை நடந்து வருகிறது. தமிழ் அர்ச்சனை வாசகங்களை நான்தான் எழுதிக் கொடுத்திருக்கின்றேன்.''

மதுரையில் எதிரும் புதிருமாக இரண்டு ஓவியர்கள். ஒருவர் சித்ரா ஸ்டுடியோ உரிமையாளர் வேங்கடசாமி. இவர் கிராமப் புறங்களின் இயற்கை அழகைத் தத்ரூபமாக வரைந்து தள்ளிக் கொண்டே இருக்கிறார். நிறைய வெளிநாட்டவர்கள் இவரது ஓவியங்களை விரும்பி வாங்கிச் செல்கிறார்கள். ஆர்டர் கொடுத்தால், ஒரே ஓவியத்தைத் திரும்பத் திரும்ப வரைந்தும் தருகிறார்.

இவர் பள்ளியில்



☛ எழுகடல் தெரு

# ஏழு கடலா? ரோமானிய நகரமா?

ஓவிய ஆசிரியராகப் பணியாற்றிய போது மாணவராக இருந்த ரஃபீக் அகமது இவ



☛ ரஃபீக் அகமது

ருக்கு நேரெதிர். ஆர்டருக்கெல்லாம் வரைவதில்லை. கொலாஜ் பாணியில் தத்ரூப ஓவியங்களை இவர் அவ்வப்போது வரைந்தாலும், நவீன பாணி ஓவியங்களையே ஆர்வத்தோடு வரைகிறார். பல மாணவர்களுக்கு இலவசமாக நவீன ஓவிய பாணியைக் கற்றும் தருகிறார். கூடவே, ஓவியங்களைப் பற்றிய தடிதடியான ஆங்கிலப் புத்தகங்களைத் தமிழில் கொண்டுவரும் முயற்சியிலும் ஈடுபட்டிருக்கிறார்.

நவீன பாணி புரிவதில்லையே என்பவர்களுக்கு இவரது பதில் : ''ஓவியம் என்பதும் ஒரு பாஷைதான். அதைக் கற்றுக் கொள்ளாமல் எப்படிப் புரியும்?''

இவர் கொலாஜ் பாணியில் மதுரையிலுள்ள எழுகடல் தெருவை வரைந்து, லலித்கலா அகாடமியின் பரிசைப் பெற்றிருக்கிறார். அதை இவர் ஒரு வரை பொருளாக எடுத்துக் கொண்டதற்கு என்ன காரணம்? ''அதைப் பார்க்கும் போது (படத்தைப் பாருங்கள்) ஏதோவொரு ரோமானிய நகரைப் பார்க்கும் உணர்வுதான் ஏற்படுகிறதே தவிர, மதுரை என்பதே மறந்து போகிறது. இதுதான் என்னை வரையத் தூண்டியது''என்கிறார்!

ரஃபீக் அகமதுக்கு இப்படித் தோன்றினாலும் அந்தப் பகுதிக்கு எழுகடல் என்று எப்படிப் பெயர் வந்தது என்பதற்குத் தல புராணமே உண்டு. சிவபெருமானுக்கும் மீனாட்சிக்கும் கல்யாணம் நடந்தவுடன், தாங்கள் ஏழு கடல்களிலும் சென்று நீராடி வர வேண்டுமென்று மீனாட்சியின் பெற்றோர் கூற, ''நீங்கள் எதற்காக கடல்களைத் தேடிப் போக வேண்டும்? ஏழு கடல்களையும் நானே இங்கு வரவழைக்கிறேன். அதில் நீங்கள் புனித நீராடுங்கள்!'' என்று சிவபெருமான் ஏழு கடல்களையும் வரவழைத்து விட்டாராம். அதனால்தான் அதற்கு ஏழு கடல் என்று பெயர்.

இன்று அந்தப் பகுதியில் வீடுகள் கட்டப்பட்டு விட்டன. நாயக்கர் மகாலின் விரிவாக்கமாக இருக்கும் ஒன்பது ராட்சசத் தூண்களை மட்டும் வீடு கட்டியவர்கள் பரிதாபப்பட்டு அப்படியே விட்டு விட்டு, சுற்றிலும் ஒட்டியபடி வீடுகளைக் கட்டி விட்டார்கள்!

- நமது நிருபர்

உத்திரப்பிரதேசம், மத்தியப்பிரதேசத்தில் காங்கிரஸ் தோல்விகள்

நரசிம்ம ராவ்

நந்தியால் தொகுதியில் 5 இலட்சத்து 80 ஆயிரம் ஓட்டு வித்தியாசத்தில் வெற்றி

சர்வதேச நிதி நிறுவனம்

டீசல் விலையை இன்னும் ஏத்து... உரவிலையைக் கூட்டு... சொன்னதைக் கேளு!

மன்மோகன் சிங்

நான் விலைவாசி இறங்குதுங்கறேன், நீ, ஏறுதுங்கிறியே? எதுக்கு பேசறே...?

பொது மக்கள்

அட! மந்திரக்கோல் நல்லாத்தான் வேலை செய்யுது!

அதிகார பலம்

ஜெயலலிதா

எம்.ஜி.ஆர். மருத்துவ பல்கலைக் கழகம்

நானும் தர்றதுக்கு ரெடி!

என் கிட்டேயும் வாங்கிக்கோங்க!

மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

நானும் குடுக்கிறேன்!

டாக்டர் பட்டம் இதோ!

அன்னை தெரசா பல்கலைக் கழகம்

சென்னை பல்கலைக் கழகம்




# கல்கி



1991
டிசம்பர் 1
மலர் : 50
இதழ் : 18
பிரஜோத்பத்தி
கார்த்திகை 15


## வெள்ளத்திலும் துயரம்; வறட்சியிலும் துன்பம்!

சமீபத்தில் தமிழகத்தில் பெய்த பெருமழை, பல உயிர்களைப் பலிவாங்கியது. தவிர, ஏராள மக்களை வீடு வாசலிழந்து தவிக்கச் செய்திருக்கிறது. சென்னையில் சாலைகள் ஆறுகளாக மாறின. பல குடியிருப்புப் பகுதிகள் ஏரிகள் போல் நிரம்பி வழிந்தன. தஞ்சையிலோ பயிர்களுக்குப் பலத்த சேதம். கன மழைதான் இப்படி துயரத்தை அளிக்கிறது என்பதில்லை. மழை பொய்த்தாலும் வறட்சியால் பயிர்கள் கருகுவதும் மக்கள் குடிநீர் கூட இன்றித் தவிப்பதும் தொடர்கதையாகிப் போயின.

மழை, பருவத்தில் பெய்யாது போனால், "மரங்களை வெட்டியது குற்றம்" என்பார்கள்; அபரிமிதமாகக் கொட்டினால், "புயல் மையம் கொண்டது, கரையைக் கடந்தது" என்று அறிவிப்புச் செய்வார்கள். பழுதி விட்டது; பரிகாரம்தான் காணோம்!

பருவ மழை பொய்க்காமல் இருக்க மரங்கள் வளர்ப்பது அவசியம்தான்; மறுக்கவில்லை. ஆனால் அது மட்டும் போதாது. பெய்யும் மழையைச் சேமித்து வைக்க வழிகாண வேண்டும். பயிர்களுக்குப் பாசன வசதி போலவே, வடிகால் வசதியும் தேவை. இவற்றை அபிவிருத்தி செய்யத்தான் அரசுக்கு முடியவில்லை என்றால், இருப்பதைப் பாதுகாக்கக் கூடத் தெரியவில்லை!

தஞ்சையோ, சென்னை நகரமோ அல்லது வேறு மாவட்டங்களோ எதுவானாலும் சரி, எத்தனை குளம் குட்டைகள், ஏரிகள் தூர்க்கப்பட்டிருக்கின்றன; ஆக்கிரமிப்புக்கு உள்ளாகியிருக்கின்றன என்று கணக்குப் பார்த்தால் பிரமிப்பாக இருக்கும். அரசு ஏன் இந்த விஷயத்தில் கண்டிப்புக் காட்ட வில்லை? விடை எல்லோருக்கும் தெரிந்ததே. லஞ்ச ஊழல் ஒருபுறம். அதிகார துஷ்பிரயோகம் மறுபுறம். அரசியல்வாதியே புறம்போக்கு நிலத்தை வளைத்துப் போடும் போது மற்றவர்களை எப்படி தட்டிக் கேட்க முடியும்?

வடிகால் வசதிகள் சரியாக இருந்து, குளம் குட்டைகளும் ஏரிகளும் நிறைந்தால், மாரிக் காலம் முடிந்து கோடை பிறக்கும் போது பயிர்களுக்கும் ஆபத்தில்லை; மக்களுக்கும் தண்ணீர்த் தட்டுப்பாடு இராது. ஆனால் அநியாய ஆக்கிரமிப்பில் எல்லாம் போச்சு! எந்தக் காலத்திலோ மன்னர்கள் அமைத்த ஏரிகளைக் காப்பாற்றக் கூடத் தெரியாத அரசு, இனிமேலா ஏரி குளங்களை வெட்டி மக்களை வாழ வைக்கப் போகிறது?

சென்னை நகரில் ஓராண்டுக்குத் தேவையான தண்ணீர், ஒரே நாளில் கடலில் கலப்பதைக் கண்டு குடிநீர் வாரியம் கைகளைப் பிசைந்து கொண்டு நின்றது! அந்த நீரைச் 'சேமித்து வைக்க இன்னுமொரு வடிகால் ஏரியை அமைக்க வக்கில்லாதவர்கள்தான் வீராணத் திட்டம் போட்டார்கள்; கிருஷ்ணா நதி நீர்த் திட்டம் அமுல்படுத்திக் கொண் டிருக்கிறார்கள். தலையைச் சுற்றி மூக்கைத் தொட்டு, மக்கள் வரிப் பணத்தை விணடிப்பதில் மன்னர்கள்.

சாலைகள் அத்தனையும் ஒரு மழை பெய்ததுமே சந்திர மண்டலத்து மேடு பள்ளங்களாகி விடுகின்றன. அவற்றில் விழுந்து, எழுந்து, தப்பிப் பிழைத்து, ஓடும் வாகனங்களுக்கு எவ்வளவு சேதம்! "சாலைகளை மறுபடி சீராக்க பத்து கோடி ஒதுக்கீடு" என்று செய்திகள். இவ்வளவு பலவீனமான சாலைகள் அமைய, லஞ்ச ஊழல் அன்றி வேறு எது காரணமாக இருக்க முடியும்? மறுபடி காண்டிராக்ட்; மீண்டும் உள்ளங்கை அரிப்பு; திரும்பவும் மழை; குழி விழுந்த சாலைகள்....

மத்திய, மாநில அரசுகள் அடிப்படை விஷயங்களை மட்டும் கவனித்தால் நன்றாக ஆட்சி செலுத்த முடியும். சாலைகள், நீர்ப்பாசனம் - வடிகால், மின் உற்பத்தி என்று இப்படி. இதைத்தான் "குறைந்தபட்ச ஆட்சி; அதிகபட்ச சுதந்திரம்" என்று அரசியல் அறிஞர்கள் கூறுவர். ஆனால் நமது அரசுகள் தேவையற்ற விஷயங்களில் எல்லாம் - மக்களின் அன்றாட வாழ்க்கையில் கூட - த லை யி டு கி ன் ற ன. மக்களை அடிமைப் படுத்தி, அவர்கள் சுய ஊக்கத்துக்குத் தடை போட்டு, அரசியல் வாதியிடம் கையேந்தி நிற்கச் செய்கின்றன. மக்களுக்கு உண்மையிலேயே தேவையான அடிப்படை விஷயங்களில் கவனம் செலுத்த அரசுக்கு நேரம் கிடைப்பதில்லை; போதிய நிதி வசதியும் இருப்பதில்லை.

வெள்ளம் என்றாலும், வறட்சி என்றாலும் மக்களுக்குத் தான் அவதி. அரசியல்வாதிக்குக் குஷிதான்! குடை பிடித்துக் கொண்டு போய் நின்று; கிழவியையோ குழந்தையையோ அணைத்து, ஆறுதல் கூறி, ரொட்டி வழங்கி, போட்டோ பிரசுரித்து, வோட்டு அறுவடை செய்யலாம்!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.



☛ மீனாட்சி கோவில் : ஒரு பறந்துப் பார்வை....

## மதுரை மாநகர மேம்பாட்டுத் திட்டங்கள்:

# சுறுசுறுப்பும் மெத்தனமும்

எப்பேர்ப்பட்ட மேதாவியையும் குழப்பியடிக்கிற விஷயம், மதுரையிலுள்ள பஸ் ஸ்டாண்டுகள்தான். ஒன்றா, இரண்டா, மொத்தம் ஐந்து பஸ் ஸ்டாண்டுகள். எந்த ஊருக்கு எந்த பஸ் நிலையத்திலிருந்து பஸ் பிடிப்பது என்பதில் மதுரை வாசிகளுக்கே இன்னும் குழப்பம் தீராத நிலையில், வெளியூர்க்காரர்களைப் பற்றிக் கேட்பானேன்? ஏண்டாப்பா மதுரைக்கு வந்தோம் என்றாகிவிடும்.

இதெல்லாம் அதிகாரவர்க்கத்தினருக்கும் தெரிந்த கதைதான் என்பதால், வெளியூர் பஸ்களுக்கெல்லாம் மொத்தமாக ஒரு சென்ட்ரல் பஸ் நிலையம் கட்டுவதென்று தீர்மானித்தார்கள். அது மாட்டுத்தாவணி என்ற இடத்தில் கட்டப்படும் என்று முதலில் அறிவித்தார்கள். பிறகு என்ன நினைத்தார்களோ, அதைப் பழங்காநத்தம் பகுதி என்று இடத்தை மாற்றினார்கள். பிறகு அதுவும் தோதில்லை என்று சொல்லி, தெற்கு வாசல் பகுதியில் போலீஸ் குடியிருப்புக் கட்டுவதற்காக ஒதுக்கப்பட்டுள்ள இடத்தில் அமைக்கப்படும் என்றார்கள். அதன்படி அந்த இடத்தில் தாற்காலிகமாக ஒரு பஸ் நிலையம் செயல்பட ஆரம்பித்தும் விட்டதால், எங்கே தங்களது குடியிருப்புக் கட்டும் திட்டத்தில் மண் விழுந்து விடுமோ என்று போலீஸ்காரர்கள் பயந்து கொண்டிருக்கிறார்கள்!

சரி, இதில்தான் இத்தனை குளறுபடிகள் என்றால், போக்குவரத்து நெரிசலைச் சிறிதளவாவது குறைப்போம் என்று போடப்பட்ட திட்டத்திலும் ஏக குளறுபடி. நகர வீதிகளில் ஆங்காங்கே நிறுத்தப்பட்டிருக்கும் வெற்று லாரிகளையெல்லாம், நகருக்கு வெளியிலுள்ள ஒதுக்குப்புறமான இடம் ஒன்றில் நிற்க வைத்தாலே போக்குவரத்து நெரிசல் எவ்வளவோ மேம்படும் என்று ஒரு திட்டம் வகுத்து, அதன்படி சரக்குகளை இறக்கிவிட்ட லாரிகள் அனைத்தும் ஆரப்பாளையம் என்கிற இடத்தில்தான் நிறுத்தப்பட வேண்டும் என்று அங்கு ஒரு பக்கா லாரி ஸ்டாண்ட் நிறுவினார்கள். லாரி உரிமையாளர்களை அழைத்துப் பேசிய போது, அங்கு கக்கூஸ் வசதி, கடை வசதியெல்லாம் வேண்டும் என்று அவர்



☛ பெரியார் பஸ் நிலையம்

கள் சொல்ல, அந்த வசதிகளும் அமைக்கப் பட்டன.

எல்லாம் முடிந்த பிறகு, இப்போது லாரிக்காரர்கள் ''எங்களுக்கு அந்த இடம் வேண்டாம்; மாட்டுத் தாவணியில்தான் இடம் வேண்டும்'' என்று அடம்பிடிக்க ஆரம்பித்து விட்டார்கள். அதனால் ஆரப் பாளையத்தில் கட்டப்பட்ட லாரி ஸ்டாண்டு முழுமையுமே அந்தப் பகுதி மக்களுக்குத் தாராளமான காற்றோட்ட முள்ள பொதுக் கழிப்பிடமாகச் சீரழிந்து கொண்டிருக்கிறது என்பதுதான் சோகம்!

இதற்கிடையில் நகரத்தின் போக்கு வரத்து நெரிசலை முற்றிலுமாகக் குறைப்ப தற்கு நகரைச் சுற்றிலும் பதினைந்து கோடி செலவில் ரிங் ரோடு அமைக்கும் திட்ட மும் இருக்கிறது. அதல்லாமல் வைகை யாற்றின் மேல் இரண்டு அடுக்குகள் கொண்ட புதிய பாலம் ஒன்றும் பெரியார் பஸ் நிலையம் மற்றும் மதுரா கோட்ஸ் அருகில் இரண்டு மேம்பாலங்கள் அமைக் கும் திட்டங்களும் உலக வங்கியின் அனு மதிக்காகக் காத்துக் கிடக்கின்றன.

ஒரு திட்டத்தைச் செயல்படுத்தும் போது, அதன் மூலம் அந்தத் திட்டத்திற்குச் செலவழிக்கும் தொகையில் குறைந்த பட்சம் பன்னிரண்டு சதமாவது திரும்பக் கிடைக்க வேண்டும் அல்லது இப்போ தைய செலவில் மிச்சமாக வேண்டும் என் றால்தான் அத்திட்டத்திற்கு உலக வங்கி யின் அனுமதி கிடைக்கும். மேற் சொன்ன திட்டங்களின் மூலம் 24 சதம் மிச்சமாகும் என்கிற நிலையிலும் உலக வங்கியின் அனுமதி பெறுவதில் சுறுசுறுப்புக் காட்டா தது ஆச்சரியமாக இருக்கிறது.

இருப்பினும் அம்பிகா தியேட்டர் அருகில் கட்டப்பட வேண்டிய பாலத்தில் மட்டும் இந்த ஆட்சியில் ஏக சுறுசுறுப்பு. காரணம், அந்தப் பாலம் கட்டப்படுவதால் மதுரையிலுள்ள தி.மு.க. புள்ளி ஒருவரின் செங்கல் சூளை முழுமையாகப் பாதிக்கப் படுகிற ஒரு விஷயம் போதாதா! அந்த ஒரு காரணத்தினாலேயே கடந்த தி.மு.க. ஆட்சி யில் கிடப்பில் போடப்பட்ட திட்டத்தைத் தூசி தட்டி எடுத்துச் செயல்படுத்தப் போகி றது இந்த ஆட்சி!

''இந்தச் சுறுசுறுப்பைப் பெரியார் பஸ் நிலையத்தைச் சீர்ப்படுத்தும் விஷயத் திலும் காட்டினால் மதுரை மக்களுக்கு எவ்வளவோ சிரமம் குறையும்'' என்கிறார் உள்ளூர்க்காரர் ஒருவர். காரணம், மழை என்று வந்து விட்டால், பெரியார் பஸ் நிலையத்துக்குள் சென்று பஸ் ஏறுவதும் தெப்பக்குளத்துக்குள் சென்று பஸ் ஏறு வதும் ஒன்றுதான். அந்த அளவுக்குத் தண்ணீர் தேங்கிவிடும். ''இந்த நிலையை



☛ ஆரப்பாளையம் : சீரழிந்து கொண்டிருக்கும் லாரி ஸ்டாண்ட்

ஜனவரிக்குள் மாற்றியமைத்து விடுவோம்'' என்று அண்மையில் மதுரைக்கு வந்திருந்த அமைச்சர் அழகு திருநாவுக்கரசு உறுதி மொழி கொடுத்திருக்கிறார்.

இது போன்ற அறிவிப்புக்களுக்கெல் லாம் புரட்சித் தலைவியின் ஆசி மட்டுமே போதுமானது என்றாலும் துட்டுக்கு உலக வங்கியின் ஆசியல்லவா வேண்டியிருக் கிறது! அப்படி அது கிடைக்காவிட்டால் தான் என்ன! வெயில்காலத்தில் 'பெரியார் பஸ் நிலையம்' என்றும் மழைக்காலத்தில் 'பெரியார் தெப்பக்குளம்' என்றும் பெயரை மாற்றி விட்டால், அப்புறம் எந்த மதுரைக்காரனாவது வந்து, 'பெரியார் தெப்பக்குளத்தில் தண்ணீர் தேங்கிக் கிடக் கிறது' என்று வாயைத் திறந்து புகார் சொல்ல முடியுமா என்ன!

அட, எல்லாவற்றையும் விட்டுத் தள் ளுங்கள். மதுரைவாசிகளுக்கு வசதி செய்யாவிட்டால், ரஷ்யா மாதிரியான தொரு புரட்சியா வெடித்து விடப்போகி றது? அதெல்லாம் ஒருபோதும் நடக்கப் போவதில்லை.

ஆனால், இது சுற்றுலா ஆண்டு. தமிழ் நாட்டிலுள்ள சுற்றுலாத் தலங்களில் மதுரை மிக முக்கியமான ஒன்று. வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளை ஈர்த்து, நாம் இப்போது உலகளாவிய அளவில் கப்பரை களை ஏந்திக் கொண்டு கேட்கும் அந்நியச் செலாவணிகளை ஈட்டுத்தரும் ஒரு தலம். இதற்காகவாவது மதுரை நகர வசதிகளை மேம்படுத்தக் கூடாதா? சுற்றுலாத் துறை யினர் உட்பட யாருமே அக்கறை காட்ட வில்லை என்பதுதான் வெட்கக் கேடு!

**- இளங்கோவன்**

அட்டையில் சித்திரைத் திருவிழா
வண்ணப்படம் : **சுலைமான்.**
மதுரை தொடர்பான மற்ற வண்ணப்
படங்களும், படங்களும் : **யோகா.**



# அன்புள்ள அலமு அக்கா,

சமீபத்தில் ஒரு ஜப்பானிய பத்திரிகையில் படித்தேன் : அந்த நாட்டில் திருமணமே செய்து கொள்ளாமலும், அப்படிச் செய்து கொண்டால் குழந்தையே பெற்றுக் கொள்ளாமலும் இருக்கும் பெண்களின் எண்ணிக்கை, கடந்த சில வருடங்களில் கிடுகிடுவென்று வளர்ந்துவிட்டதாம். பணியிடத்தில் பொறுப்பான பதவிகளை வகிப்பதால், குழந்தை பெற்றுக் கொள்ள நேரம் இல்லை என்று இப் பெண்கள் கூறுகிறார்களாம். இதனால் ஜப்பானின் Birth rate கவலையளிக்கும் விகிதத்தில் குறைந்து போயிருக்கிறது! அரசாங்கம் மாற்று நடவடிக்கைகளில் முனைந்துள்ளது!

நம் நாட்டில் இந்த மாதிரி சூழ்நிலை எதிர் காலத்தில் ஏற்படுமோ என்னமோ இன்றைக்கு இல்லை. தாய்மையை நாம் இன்னமும் உன்னதமான விஷயமாகப் போற்றவே செய்கிறோம். ஆனால் அதே நேரத்தில் பெண்கள் வேலைக்குப் போவது என்பது இயல்பான செயலாகவும் ஆகிவிட்டது. இதனால் முரண்பாடுகளும் பிரச்னைகளும் தோன்றுகின்றன.

உனக்குத்தான் வினிதாவைத் தெரியுமே? அவள் வேலையை விட்டுவிட்டாள். கைக் குழந்தையைப் பார்த்துக் கொள்ள ஆள் கிடைக்கலையாம். 'கிரெஷ்'ஷில் விட அவள் கணவனுக்குச் சம்மதம் இல்லை. அன்பான கவனிப்பு போதாது; சுகாதாரமாக இல்லை என்கிறாராம். மாதம் இரண்டாயிரம் ரூபாய் வருமானம் திடுதிப்பென்று நின்று போகும். என்ன செய்வார்களோ தெரியவில்லை! வருமானம் போனாலும் போகட்டும்; குழந்தைக்காக அவள் தன் பணி வாழ்க்கையை முற்றிலுமாகத் தியாகம் செய்ய வேண்டும் என்று வினிதாவின் கணவரும் அவர் வீட்டைச் சேர்ந்தவர்களும் எதிர்பார்க்கிறார்கள். வேலையை விடாவிட்டால் குற்ற உணர்வு வினிதாவை வாட்டும். ஆனால் அந்தத் தியாகத்தை அவளால் சந்தோஷமாகச் செய்யவும் முடியவில்லை. அவள் வருத்தம் நாளடைவில் குழந்தை பேரில் கூடத் திரும்ப வாய்ப்பு இருக்கிறதல்லவா?

பிரிட்டனில் உள்ள இரண்டு வங்கிகள், தங்கள் பெண் ஊழியர்கள் குழந்தை பெற்று, வளர்த்து வேலைக்குத் திரும்ப நான்கு ஆண்டுகள் விடுப்பு அளிக்கின்றன. சம்பளம் கிடையாது; ஆனால் திரும்பச் சேரும்போது, விட்டுச்சென்ற 'grade' லேயே சேரலாம்.

எல்லா அலுவலகங்களிலும் பெண்களுக்கு இந்த அளவுக்கு வசதி பண்ணித் தருவது சாத்தியமில்லைதான். ஆனால் பெண்களை வேலைக்கு அமர்த்தும் நிறுவனங்கள், மகப்பேறையும் குழந்தை வளர்ப்பையும் சமாளிக்க உதவும் வகையில் கிரஷ்களை நிறுவியோ, வேறு விதங்களிலோ அனுசரணையாக நடந்து கொள்ள முன் வரலாமே.

பெண் உரிமைக்காக வரிந்து கட்டிக் கொண்டு குரல் கொடுக்கிற இயக்கங்கள் சுகாதாரமான, அன்பான பராமரிப்புடன் கூடிய நம்பகமான கிரெஷ்களை நிறுவுவதில் கவனம் செலுத்தலாமே. அதுவே பெண் உரிமையைப் பாதுகாப்பதற்கு அவர்கள் செய்கிற ஆக்கபூர்வமான தொண்டாக இருக்காதோ?

இப்படிக்கு அன்புடன்,

-அம்மு

பி.கு. : பேசாமல் இந்த 'பாங்க்' வேலையை உதறிவிட்டு ஒரு கிரெஷ் ஆரம்பிக்கலாமோ என்று கூடத் தோன்றுகிறது.



கல்கத்தாக் கடிதம் :

# முந்நூறு வயது நகருக்குப் புத்தம்புது அழகுகள்!

கல்கத்தாவுக்கு முந்நூறு வயது நிறைந்ததையொட்டிப் பல வர்த்தக நிறுவனங்கள் நகருக்கு அழகு செய்ய முன் வந்தன. பிர்லா பிளானெட்டேரியத்துக்கு முன்னாலுள்ள முக்கோணத் தீவில் ஐ.டி.சி. ஓர் அழகிய பூங்கா அமைத்திருக்கிறது. கல்கத்தா மின்சார சப்ளை கார்ப்பொரேஷன், விக்டோரியா மெமோரியலுக்கு முன்னால் இசை நீரூற்று (Musical fountain) அமைத்துள்ளது.

இப்போது வங்காள வர்த்தக சபை சுமார் ஒரு கோடி ரூபாய்ச் செலவில் 'ஒலியும்-ஒளியும்' நிகழ்ச்சியைக் கல்கத்தாவுக்கு வழங்கியுள்ளது. வரலாற்றுப் புகழ் பெற்ற விக்டோரியா மெமோரியலின் (படம்) கிழக்குப் பக்கத்தில் இந்த நிகழ்ச்சியை அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. கல்கத்தாவின் முந்நூறாண்டு வரலாற்றை இந்தக் காட்சியில் காணலாம். இதற்கு வசனம் எழுதியிருப்பவர் பிரபல வங்காளி எழுத்தாளர் சுநீல் கங்கோபாத்தியாய். வங்காளி வசனத்துக்குக் குரல் கொடுத்திருப்பவர் தலை சிறந்த நடிகர் சௌமித்ர சட்டோபாத்தியாய்..

## ஒரு சோக நிகழ்ச்சி

அக்டோபர் 16 ஆம் தேதியன்று கல்கத்தா தேசிய நூலகத்தில் ஒருவர் பாத்ரூமுக்குப் போய் ஒரு புத்தகத்தைத் தன் உடைக்குள் மறைத்து வைத்துக் கொள்ளும் போது, கையுங்களவுமாகப் பிடி பட்டார். அவர் திருட முயற்சி செய்தது ஒரு ஸ்பானிஷ் மொழி நூலை.

அவர் ரிசர்வ் பாங்கில் பணிபுரிபவர். ஸ்பானிஷ் மொழி வல்லுனர். பல ஆண்டுகளாகவே அவர் நூலகத்திலிருந்து புத்தகங்கள் திருடிவந்திருக்கிறார். பிடிபட்டதும் அவர் தம் வீட்டு அலமாரிச் சாவியை நூலக அதிகாரியிடம் கொடுத்துவிட்டார். அவர்கள் அவரது வீட்டில் சோதனை செய்ததில் 73 புத்தகங்கள் கிடைத்தன. எல்லாம் ஸ்பானிஷ் மொழி நூல்கள்! அவற்றில் பத்தொன்பது தில்லி ஜவாஹர்லால் நேரு பல்கலைக் கழக நூலகத்திலிருந்து திருடப் பட்டவை.

திருடியவர் பல தடவை தேசிய நூலகத்துக்காக ஸ்பானிஷ் மொழியிலிருந்து மொழி பெயர்ப்புச் செய்து கொடுத்திருக்கிறார். இதைக் கருதி அதிகாரிகள் போலீசில் புகார் செய்யவில்லை. ஆனாலும் இந்த நிகழ்ச்சி பத்திரிகைகளில் விளம்பரமானதால் ஏற்பட்ட அவமானம் பொறுக்காமல் அவர் தற்கொலை செய்து கொண்டு விட்டார்!

- எஸ். கே. எம்.

# பிரதோஷ காலம் – பிரதோஷ வரலாறு

சுக்கில பக்ஷம், கிருஷ்ண பக்ஷம் என்னும் இரண்டு பக்ஷத்திலும் வருகின்ற திரயோதசி திதியில் சூரியாஸ்தமனத்திற்கு முன் மூன்றே முக்கால் நாழிகையும், பின் மூன்றே முக்கால் நாழிகையுமாய் உள்ள காலமே பிரதோஷம் எனப்படும்.

## பிரதோஷ வரலாறு

### தசமி திதியன்று (பத்தாவது நாள்) நடந்தது:

தசமி திதி அன்று ஒருவேளை உண்டு இந்திராதி தேவர்களும் அசுரர்களும் மந்திரகிரியை மத்தாகவும், வாசுகி என்ற நாகராஜனைத் தாம்புக் கயிறாகவும் அமைத்தார்கள். அசுரர்கள் தலைப்புறமாகவும், தேவர்கள் வால்புறமாகவும் நின்று அமிர்தம் கடையலானார்கள். கடைந்தபோது வாசுகி நஞ்சை உமிழ்ந்தது. கடலில் இருந்தும் நஞ்சு தோன்றியது. வாசுகி கக்கிய ஆலமும் கடலில் தோன்றிய ஆலமும் ஒன்று சேர்ந்து ஆலாலம் எனப் பேர் பெற்றது. அக்கொடிய விடத்தை வானவர்கள் விருப்பப்படி அடியவர்களாகிய அமரர்கள் உய்ய அமுதம் போல் சிவபெருமான் உண்டருளினார்.

### ஏகாதசி திதியன்று (பதினோராவது நாள்) நடந்தது:

சிவபெருமான் சொற்படி தேவர்கள் மறுபடியும் பாற்கடலைக் கடைந்தார்கள். ஏகாதசியன்று பகல் முழுவதும் பட்டினி இருந்து இரவு முழுவதும் உறக்கமின்றி பாற்கடலைக் கடைந்தார்கள்.

### துவாதசியன்று நடந்தது (பன்னிரண்டாவது நாள்):

துவாதசியன்று அதிகாலையில் அமிர்தம் கிடைத்தது. அதைத் தேவர்கள் பகிர்ந்து உண்டார்கள். அந்த மகிழ்ச்சியில் தேவர்கள் துவாதசியன்று ஆடியும் பாடியும் பொழுதைப் போக்கினார்கள்.

### திரயோதசி அன்று நடந்தது (பதிமூன்றாம் நாள்):

தேவர்கள் சிவபெருமானை முன்னாலே வணங்காது பொழுது போக்கிய தங்கள் குற்றத்தை உணர்ந்து சிவபெருமானிடம் பணிந்து தங்கள் குற்றத்தை மன்னித்தருளுமாறு வேண்டினார்கள்.

பரம கருணாநிதியாகிய சிவபெருமான் மகிழ்ந்து தேவர்களுக்கு அருள் புரியத் திருவுளம் கொண்டு கயிலையில் அன்று மாலை (4.30 மணி முதல் 6.00 மணி வரை.) பிரதோஷ வேளையில் தவத்திரு முன் இருந்த ரிஷப தேவரின் இரு கொம்புகளுக்கிடையில் நின்று அம்பிகையைக் காணத் திருநடம் செய்தருளினார். தேவர்கள் அதனைத்

தரிசித்து சிவபெருமானை துதி செய்து வணங்கினார்கள். அது முதல் திரயோதசி திதியன்று மாலை நேரம் பிரதோஷம் ரஜனீ முக வேளை பாபத்தை போக்கும் நேரம்.

## பிரதோஷ பூஜாபலன்:

சிவ மூர்த்திக்குரிய பல வித விரதங்களில் தலையாயது. இவ் விரதத்தை அநுஷ்டிப்போர் துன்பங்களினின்றும் நீங்கி இன்பத்தை எய்துவர்.

## பிரதோஷ மகிமை:

சிவபெருமான் பிரதோஷ காலத்தில் இடப தேவரின் இரு கொம்புகளுக் கிடையே உயிர்கள் உய்யும் பொருட்டு திருநடம் புரிந்தார். அப்போது சரஸ்வதி வீணை வாசித்தாள். இந்திரன் புல்லாங்குழல் ஊதினார். பிரம்ம தேவர் தாளம் போட்டார். இலட்சுமி தேவி பாடினாள். திருமால் மிருதங்கம் வாசித்தார். தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், யக்ஷர்கள், கின்னர்கள், திசை பாலர்கள் முதலிய அனைவரும் வந்து பிரதோஷ காலத்தில் இறை வனை வழிபடுகிறார்கள்.

## 18

இன்ஸ்பெக்டர் ஷண்முகம் மெல்ல அந்த உடலை அணுகி, அந்தக் காகிதத்தை எடுத்துப் பார்த்தார். மாலைச் செய்தித் தாளின் பகுதி அது.

''தேதி என்ன போட்டிருக்கு, பாருங்க?''

''பதினெட்டு, வெள்ளிக்கிழமை.''

''செல்வி செத்தாளே, அதே தேதி!''

ஷண்முகம் மனோஜைப் பார்த்து, ''அய்யா இந்தாளு உங்க சைட்டில வேலை பார்த்த ஆளுங்களா சொல்லுங்க?'' என்றார்.

மனோஜ் பயத்துடன் ''என்ன வேலை?'' என்றான்.

''வாட்ச்மேன் மாதிரி தெரியுது. சரியாப் பார்த்துச் சொல்லுங்க. ஆளை அடையாளம் கண்டுபிடிக்க வேண்டியது முக்கியம்.''

மனோஜ் தயக்கத்துடன் அந்த உடலைப் பார்த்தான்.

''பார்த்தா அந்த மாதிரித்தான் தெரியுதுங்க.''

''மஸ்டர் ரோல் இருக்குதில்லை. அதில் விரல் அடையாளம் இருக்குமில்லை; பணம் வாங்கறப்ப?''

''ஆமாம்ங்க.''

''மஸ்டர் ரோலைக் கொடுத்துருங்க'' என்றார். ''இந்தாளு கூட ஷண்பேகர் வாக்குவாதம் ஏதாவது செய்தாராமா?''

''இல்லைங்க இன்ஸ்பெக்டர். ஷண்பேகருக்கும் காஷுவல் எம்ப்ளாயிஸ்க்கும் சம்பந்தமே இல்லை. எல்லாம் நானே பாத்துக்கிட்டு இருந்தது.''

''பின்னே எப்படி செத்திருப்பான்?'' என்றார்.

''அது நீங்க கண்டுபிடிக்க வேண்டியது.''

''எதுக்கும் மஸ்டர் ரோல் பாரங்களையெல்லாம் கொடுங்க என்ன? கிராமத்தை விட்டு எங்கேயும் போயிராதிங்க. உங்க நண்பரைத்தான் வலைவீசித் தேடிக்கிட்டு இருக்கோம். ஆளையே காணோம். என்னவோ எடக்கா நடக்குதுங்க. கிராமத்தில் நீங்க லாட்டிலைட்டு வெச்சாலும் வெச்சிங்க...''

''இன்னம் வெக்கலிங்க, கால் வேலை கூட ஆகலை.''

''பேசாம ஊரைப் பார்க்கப் போயிருக்கலாம், முனீஸ்வரன் மரத் தகராறு வந்தப்பவே. இப்ப கேஸ் முத்திருச்சு. எஸ்பி யாளா தினம் போன் போட்டுப் பேசிக்கிட்டு இருக்காரு, ஏதாவது கண்டுபிடிச்சியா கண்டுபிடிச்சியான்னு?''

''அதுக்கு நான் எந்த ஒத்துழைப்பும் கொடுக்கத் தயாருங்க.''

''உங்க நண்பர் எப்பவாவது உங்களை ரகசியமாச் சந்திக்க முயற்சி செய்தா உடனே எங்களுக்குத் தகவல் சொல்ல வேண்டியது உங்க கடமை.''

''சரிங்க.''

''உங்க சம்சாரத்தின் பேர்ல முனிசாமி வந்திருச்சாமே...''

''அப்படித்தான் சொல்றாங்க''

''எல்லா ஊர்லயும் சேதி போயி ஸ்பெஷல் பஸ்ஸில வள்ளிக்குப்பம் வந்துக்கிட்டு இருக்காங்க சனங்க. அவங்க சொல்றதெல்லாம் பலிக்குதாம். ஒங்க நாயி திரும்பக் கிடைச்சுட்டது உண்மையா?''

''ஒரு நாய் கிடைச்சிருக்கு. அதே நாய்ங்கறாங்க எல்லாரும். எனக்கு அப்படித் தோணலை.''

''உங்களுக்கு இதிலெல்லாம் நம்பிக்கை இல்லைதானே?''

''இல்லைங்க.''

''உங்களுக்குத் தெரியாதுங்க. இதில எல்லாம் பின்னணியில ஒரு தெய்வ சக்தி இருக்குதுங்க. எனக்கே தெரியுங்க...''

''எனக்கு நம்பிக்கையில்லை.''

சுஜாதா

வீட்டுக்குத் திரும்பிய போது டிவி வாசலில் கயிற்றுக் கட்டில் போட்டு உட்கார்ந்திருந்தார். ''உள்ளே கூட்டம் சமாளிக்க முடியலை'' என்றார்.

''என்ன ஆச்சு?''

''எல்லாம் உங்க ஒய்ப்தான்.''

''ப்ரமிளாவா?''

''ஆமாம், போய்ப் பாருங்க.''

பிரமிப்புடன் உள்ளே சென்ற போது, பூசாரி பவ்யமாக இடுப்பில் பட்டுத் துண்டு கட்டி வாயைப் பொத்தி அவள் முன் நின்று கொண்டிருக்க, ப்ரமிளா அசாதாரணமாகச் சப்பளம் கட்டிக் கொண்டு மார்புப் புடைவை விலகியது மதிக்காமல் தலை விரிந்து, நெற்றியில் ரத்தச் சேறு போலக் குங்குமம் இட்டு ஒரே திக்கில் பார்த்துக் கொண்டிருக்க...

''தாயே என்ன செய்யணும் என்ன செய்யணும்?'' என்று முனீஸ்வர பூசாரி கேட்க...

ப்ரமிளா ''ஹரிஹரா திரிபுராந்தக ஜீவா தாரா... எங்கள் அம்பிகையொரு பாகா எங்கும் நிரந்தரமாய் என்னுள் என்னைப் போ லி ரு ந் து நினைப்பவர்க்கருள் போகா...'' என்றெல்லாம் சொ ல் லி க் கொண்டிருந்தது மனோஜுக்கு ஆச்சரியமாக இருந்தது. எங்கே கற்றுக் கொண்டாள் இதெல்லாம்? ஒருவேளை அவள் மேல் நிசமாகவே சாமி வருகிறதோ? சே! எப்படி இதை நம்பலாம்? பின் எப்படி இவளுக்கு இத்தனை பேச்சு வருகிறது? பம்பாயில் தமிழ் பேசியே அறியாதவள், எப்படி...?

''தலம் வந்து விதி வலம் வந்து கண்கள் ஜலம் வந்து கோரும் பலன் வந்து எங்கள் குலம் சுத்தமாச்சு...''

''ஈஸ்வரி என்ன செய்யணும் பரிகாரம்?''

''மண்டபத்தில தோண்டு. எனக்கு மூச்சு முட்டுது. ப்ரதிஷ்டை பண்ணு, ப்ரதிஷ்டை பண்ணு அதிக காலம் நான் வாசம் பண்ண முடியாது.''

''எந்த மண்டபம், எந்த மண்டபம்?''

''சொல்றேன் சொல்றேன்'' என்றவள் சற்று நேரத்தில் தூக்கத்தில் போல் சாய்ந்து விட்டாள்.

''சாமி போயிருச்சு'' என்றான்.

டோட்டுவுக்கு நெற்றியில் குங்குமம் இட்டு, கழுத்தில் மாலை சுற்றி அது வாலை ஆட்டிக் கொண்டு வலம் வந்து கொண்டிருந்தது.

மெல்ல நித்யா, ப்ரமிளாவை உள்ளே அழைத்துச் சென்று கட்டிலில் உட்கார வைக்க, மனோஜ் அவளருகில் சென்று தலையைக் கோதி, ''ப்ரமிளா ஆர் யு ஆல் ரைட்?'' என்றான்.

அவள் கண் திறந்து வெற்றுப் பார்வை பார்த்தாள். மனைவியை இழந்து விடுவோமோ என்கிற பயம் கூட அப்போது ஏற்பட்டது மனோஜுக்கு.

''ப்ரமிளா உனக்கு என்ன பண்றது?''

''ஞாபகம் இல்லை.''

''ஒருவேளை ஃபிட்ஸ் மாதிரி வரதா நித்யா?''

''அதெல்லாம் இல்லை மனோஜ். முனீஸ்வரன் அம்பாள் ரூபத்தில அவ பேர்ல வரார். இல்லைன்னா இப்படி சம்ஸ்க்ருதத்திலயும் தமிழ்லயும் எப்படி ஸ்பஷ்டமா பேச முடியறது?''

''என்னவோ எனக்கு எதும் புரியலை.''

''கொஞ்ச நாளைக்கு அவளை உங்க மனைவியா ட்ரீட் பண்ணாதீங்க. நான் சொல்றது புரியறதோல்லியோ? தெய்வத்தின் அம்சமா வச்சுக்கணுமாம். பூசாரி சொன்னார். ரெண்டு வேளையும் குளிக்கணுமாம். மஞ்சள் உடுத்தணுமாம்.''

''ப்ரமிளா என்ன இது? எதுக்காக இங்க வந்தோம், என்ன செய்றோம்?''

ப்ரமிளா ''எனக்கு டயர்டா இருக்கு'' என்று பூனைக் குட்டி போல் சுருண்டு படுத்துக் கொண்டு தூங்கிப் போனாள்.''

''நடுராத்திரில தான் பசிம்பா. அப்ப இந்தப் பாலை மட்டும் கொடுத்துருங்கோ. மறுபடி தூங்கிப் போய்டுவா. காலை விருந்து கூட்டமான கூட்டம். முனீஸ்வரன் ரெண்டாவது பலி வாங்கிட்டாராமே, அந்த தோட்டக்காரனை?''

''அய்யோ இது யார் சொன்னது உனக்கு?''

''எல்லாரும். ஆரம்பாக்கம் வரை பேசிக்கிறாங்க. நடேச பண்டிதர் தோட்டத்தில் பாடி கிடைச்சதாமே! அவனும் முனீஸ்வரனை நிந்தனை பண்ணிருக்கான் போல. அதான் பலிவாங்கிட்டார்.''

''நித்யா ஆர் யு ஸீரியஸ்? சைன்ஸ் படிச்ச பொண்ணு நீ... இதையெல்லாம்

''என்னோட மூணு பையன்களுக்குமே கல்யாணம் பண்ற வயசுதான்!''

''அப்ப இன்னும் ரெண்டு மூணு வருஷத்துக்குச் சாயங்கால டிபனுக்குக் கவலையில்லை!''

– எஸ். சுந்தரராஜ்



நம்பறியா?''

''இதுக்கெல்லாம் வேற எக்ஸ்ப்ளனேஷன் இருந்தாச் சொல்லுங்க மனோஜ்.''

''எதுக்கெல்லாம்?''

''டோட்டு உயிரோட வந்ததுக்கு. ப்ரமிளா மண்டபத்ல இருக்கிற ப்ரதிஷ்டையைப் பற்றி சம்ஸ்க்ருதத்தில குறி சொல்றதுக்கு...''

''சம்ஸ்க்ருதம் இல்லை அது.''

''அவ பாடற பாட்டு?''

''எப்பவாவது சின்ன வயசில கத்துண்டு இருக்கலாம். எனக்கென்னவோ எல்லாத்துக்கும் ரேஷனலா விஞ்ஞானப்படி ஒரு விளக்கம் இருந்தாகணும்னு தோண்றது!''

''இப்ப மண்டபத்தில தோண்டிப் பார்க்கப் போறா...''

''என்ன?''

''ப்ரமிளா சொல்லிருக்காளே. மண்டபம்தான் எங்கிருக்குன்னு தெரியலை. ராத்திரி தூக்கத்தில ஏதாவது சொன்னா ப்ளீஸ் குறிச்சு வச்சுண்டிருங்கோ மனோஜ்.''

''ஆல் ஆஃப் யு ஆர் க்ராக்பாட்ஸ்'' என்றான்.

''க்ராக்பாட்ஸ் க்ராக்பாட்ஸ்'' என்று ராத்திரியெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தான். பக்கத்தில் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்த மனைவியைப் பார்த்தான். ஏதும் புரியவில்லை. எதையும் கோர்வையாக எண்ணிப் பார்க்க இயலவில்லை.

நெற்றிக் குங்குமம் தலையணையெல்லாம் பரவியிருந்தது. இவள் யார்? தேவியா, முனீஸ்வரன் தங்கையா, என் மனைவியா, பொய் உருவமா, சித்தப்பிரமை பிடித்தவளா, சைக்காலஜிக்கல் கேஸா இல்லை, ஏதோ அமானுஷ்ய சக்தி பெற்றவளா, இல்லை குடும்பத்தில் ஏதாவது பைத்தியக்கார ஜீன் இருக்கிறதா?

ப்ரமிளா திரும்பிப் புன்னகை செய்தாள், கனவில் ஏதோ தேவதைகள் உலவுவது போல...

அவளைப் பார்த்துக் கொண்டே படுத்துக் கொண்டிருந்தான். தூங்கிப் போனான்.

இரவு மூன்று மணியிருக்கையில் சப்தம் கேட்டு எழுந்து விட்டான். ப்ரமிளா இருட்டில் எழுந்து உட்கார்ந்திருந்தாள். ''மனோஜ் வா'' என்றாள்.

''எங்கே?''

''மண்டபத்துக்கு.''

''என்ன மண்டபம்?''

''தெரியாது. வழி மட்டும் தெரியுது. வா மனோஜ்.''

''இப்ப வேண்டாம். காலையில பார்த்துக்கலாம், தூங்கு.''

''காலையில மறந்துடும் மனோஜ். இப்பத்தான் வழி தெரியுது. தாமரை மண்டபம் நடுவில. மூச்சு முட்டறது. மனோஜ் முனீஸ்வரன் கூப்பிடறார். மனோஜ், வந்துரு.''

''ஏய் ப்ரமிளா யு நட்... படு பேசாம'' என்று அதட்டி அவளை வீழ்த்திப் போர்த்தித் தானும் படுத்துக் கொண்டான்.

சற்று நேரத்தில் மறுபடி சப்தம் கேட்க அவள் அவன் மேல் அவனைக் கடந்து ''நீ வராட்டா நான் போறேன்'' என்றாள்.

''எங்க போறே? ஏய்?''

ப்ரமிளா கனவில் போல் ''நித்யா நித்யா'' என்று அழைக்க, நித்யா பதறிக் கொண்டு வந்து, ''என்ன?'' என்றாள்.

''மண்டபத்துக்கு வழி தெரியறது. என்னோட வரயா?''

''வரோம் தாயே நிச்சயம்.''

''எல்லாரையும் கூப்பிடு.''

''கூப்பிடறேன் தாயே.''

''எனக்குக் குளிக்கணும்.''

''வெந்நீர் போடட்டுமா?''

''மண்டபத்தில குளிக்கணும். மஞ்சள் மட்டும் எடுத்துண்டு வா...''

ப்ரமிளா தெருவில் நடக்க ஆரம்பித்தாள்.

(தொடரும்)

"அம்மா..."

பொன்னுத்தாய் சாணம் பொறுக்கிய கையோடு என்ன என்பது போல ஏறிட்டுப் பார்த்தாள்.

"ஒரே ஒரு தடவை பாக்கறேம்மா..."

"காலங்காத்தாலே என்ன இது. அடிக்கடி கை வைச்சா, கூமுட்டையாயிடும். இன்னைக்கு நாளைக்குப் பொரிக்கும், அப்ப பார்க்கலாம்" பொன்னுத்தாய் மீண்டும் சாணம் பொறுக்க ஆரம்பித்தாள்.

மாரிமுத்துவுக்கு ஏமாற்றமாய் இருந்தது. அந்தப் பிஞ்சு முகம் வாடியது. "ச்சே" காலை எரிச்சலோடு தரையில் உதறினான். இன்னொரு தடவை கேட்கலாமா? வேணாம். கம்பை எடுப்பா... அடிச்சா காலெல்லாம் வீங்கிப் போவும். இந்த அப்பா சுத்த மோசம்! போகும் போது சாட்டைக் கம்பை எடுத்துட்டுப் போயிருக்கக் கூடாது? ஏதேதோ நினைத்தபடி திண்ணையில் வந்து உட்கார்ந்தான்.

ரங்கன் கேட்பான், 'என்னால, முட்டை பாத்தியாலே?' அலட்சியமாய்க் கேட்பான். பொய் சொல்லலாமா? 'முட்டை பார்த்தேன். காதுல வச்சுக் கேட்டேன். கீச்.. கீச்சுன்னு சப்தம் கேட்டுச்சு'ன்னு சொல்லலாமா... வேணாம். பொய் சொன்னா சாமி குத்தம் வரும்னு அம்மா சொல்லுவா. பொய் சொல்லுதம்னு தெரிஞ்சா ரங்கன் கேலி பேசுவான். அம்மா வயலுக்குப் போன பின்னால பாக்கலாம்.

மாரிமுத்து ஒரு தீர்மானத்திற்கு வந்தவனாய்க் காத்திருந்தான்.

கை கால் கழுவி விட்டு வீட்டுக்குள் நுழைந்தாள் பொன்னுத்தாய். இன்னும் அவளிடமிருந்து சாண வாசனை வந்தது. உள்ளங்கை நிறைய எண்ணெய் எடுத்துத் தலையில் தேய்த்துக் கொண்டாள். படியத் தலைவாரிக் கொண்டையிட்டாள்.

மாரிமுத்து வீட்டிற்குள் எட்டிப் பார்த்தான்.

தூக்கு வாளியில் கஞ்சி ஊற்றிக் கொண்டு, களை வெட்டியை எடுத்துக் கொண்டு புறப்பட்டாள்.

"ஏல மாரி, போன பின்னாடி கோழிகிட்டே போய்ச் சேட்டை பண்ணுனே... கொன்டேன்னு தெரிஞ்சுது... படுவா... நாலு பூசை வைச்சிருவேன்!" பொன்னுத்தாய் போகிற போக்கில் மாரிமுத்துவை மிரட்டி விட்டுச் சென்றாள்.

மாரிமுத்து பொன்னுத்தாய் போவதையே பார்த்துக் கொண்டிருந்தான். அவள் தெருமுனை திரும்பி ஒற்றையடிப் பாதையில் நடந்த போது, அவனுக்குச் சந்தோஷமாக இருந்தது. "இனி சாயங்காலந்தான் வருவா..." என்று வாய் விட்டுச் சொன்னபடி நிலைவாசலில் இருந்த சாவியை எடுத்துக் கதவைத் திறந்தான்.

ஏதோ சொர்க்க வாசலைத் திறந்து விட்டாற்போலிருந்தது. அறையின் மூலையில், சிறகுக்குள் முட்டைகளைப் பொதித்தபடி கூடையில் படுத்திருந்தது, சாம்பல் நிறக் கோழி. மாரிமுத்து அதன் அருகில் அமர்ந்து மெல்ல அடிவயிற்றில் கை வைத்தான். கதகதப்பாய் உள்ளே முட்டை தட்டுப்பட்டது.

மாரிமுத்துவுக்கு ஏனோ... ரங்கன் அப்போது உடன் இருந்திருக்க வேண்டுமென்று தோன்றியது. நடுவில் இருந்த முட்டையை எடுத்துக் காதருகில் கொண்டு சென்றான். 'டிக்... டிக்...' என்ற சப்தம் கேட்பதாகப்பட்டது. மாரிமுத்துவுக்கு உடலெங்கும் ஒரு பரவசம் மின்னலாய்த் தோன்றி மறைந்தது.

ஆள்காட்டி விரலால் முட்டையை ஒரு தட்டுத் தட்டியதும் கீச்சென்று சப்தம் கேட்டது. மனமெங்கும் எதையோ சாதித்து விட்ட மகிழ்ச்சி தோன்றியது.

மாரிமுத்து மீண்டும் முட்டையைக் கோழியின் அடிவயிற்றில் வைக்கப் போகையில்தான் அந்த விபரீதம் நிகழ்ந்தது. கை தவறி விழுந்த முட்டை, ஓடு பிரிந்து ரத்தம் கசிந்தது. "கடவுளே" மாரிமுத்துவுக்கு முகம் வியர்த்தது. மனமெங்கும் பயம். "இன்னைக்கு அடி நிச்சயம்."

மாரிமுத்து முட்டையைக் கூடையில் வைத்து விட்டுத் தெருவுக்கு வந்தான். இப்போது என்ன செய்வது? மேலக் கடைக்காரச் சுடலை மச்சானிடம் கேட்கலாம்; ஆனால் அவருக்கு அம்மாவைக் கூப்பிட்டு, "கேட்டியா உம் மவன் சேதிய" என்று கோள் சொல்லாவிட்டால் தூக்கம் வராது.

மாரிமுத்து சுடலைக் கடையைப் பார்த்தபடி என்ன செய்வது என்று தெரியாமல் யோசித்துக் கொண்டிருந்தான். ஐந்து வயதுச் சிறுவன் மனத்தில் அப்படி என்ன பிரமாதமான யோசனை வந்து விடப் போகிறது. அழுகை அழுகையாக வந்தது.

வெள்ளாளங்குளத்தான் மாரிமுத்துவைக் கூப்பிட்டு மிட்டாய் வாங்கிக் கொடுத்தான். மாரிமுத்துவுக்கு எப்போதாவது இப்படி கிடைக்கும். தகப்பன் இல்லாத பிள்ளை என்று யாராவது, மிட்டாய், பிஸ்கட் என்று ஏதாவது வாங்கிக் கொடுப்பார்கள்.

மாரிமுத்துவுக்குப் பளிச்சென்று ஒரு யோசனை தோன்றியது. மிட்டாயை வாங்

இக் கொண்டு ரிலே ரேஸ் ஓடுவது போல் நேராக அம்மன் கோவிலுக்குச் சென்றான். மிட்டாயைக் கோவில் படிக்கட்டில் வைத்து விட்டுக் கையெடுத்துக் கும்பிட்டான்.

''சாமி குஞ்சு பொரிக்கணும்; நல்லாப் பொரிக்கணும். நீ மட்டும் குஞ்சு பொரிக்க வைச்சுட்டேன்னா... இ ன் னு ம் பத்துப் பைசாவுக்கு ஆரஞ்சு வில்லை வாங்கி வைக்கேன்.''

மாரிமுத்து வெகு நேரம் கோவிலில் அமர்ந்திருந்தான்.

இதற்கு முன் ஒருமுறை மாரியின் வீட்டில் குஞ்சு பொரித்திருக்கிறது. மாரிக்கு நன்றாக நினைவிருக்கிறது.

அன்று சாக்கு விரித்துப் பொன்னுத்தாய் குஞ்சை இறக்கி விட்டிருந்தாள். குருணையும், தண்ணீரும் வைத்தாள். இரண்டு அரிசியைக் கொறித்து விட்டு விக்கல் எடுத்தாற் போல தண்ணீர் குடித்த குஞ்சுகள் அழகாக இருந்தன. கீச்... கீச்சென்று கத்திக் கொண்டே தாய்க் கோழியிடம் ஏதோ குறை சொல்வது போலவும் இருந்தது.

மாரிமுத்து அருகில் இருந்து ரசித்தான். 'அப்பாவுக்கு மேலுக்கு நல்லால்லே. அவரு எழுந்திரிச்சவுடனே இதக் காட்டணும்' என்று நினைத்துக் கொண்டான்.

அப்போதுதான் அந்த சப்தம் கேட்டது. வானமே இடிந்து விழுந்து விட்டாற் போல, பொன்னுத்தாய் பெருங் குரலெடுத்து அழுதாள். மாரிமுத்துவுக்கு அம்மாவின் மேல் கோபம் வந்தது. 'இவளுக்கு என்ன ஆயிப் போச்சு? நம்ம அழுதா மட்டும் கம்பு எடுத்து அடிக்க வார அம்மா இன்னைக்கு ஏன் இப்படி அழுவுதா...'

சப்தம் கூடிக் கூடிப் பெருகியது. ரங்கன் அம்மா, கடலை பெண்டாட்டி, பொம்மி அக்கா எல்லாரும் அழுதார்கள். மாரிமுத்து மெல்ல முன் அறைக்கு வந்து எட்டிப் பார்த்தான். அப்பா நடுவில் மல்லாக்கப் படுத்திருக்க, எல்லோரும் சுற்றி இருந்து அழுதார்கள். அம்மா தலையை விரித்துப் போட்டு, மாரில் அடித்துக் கொண்டு அழுதாள். மாரிக்கு எதுவுமே புரியவில்லை. 'வழக்கமாக ஒரு சொல்லில் எழுந்திரிக்கிற அப்பா, இன்னிக்கு அனக்கமில்லாம கிடக்குது அலுவுசமா இருக்கே' என்று நினைத்துக் கொண்டான்.

வெகு நேரங் கழித்து மாரியின் அப்பாவைப் பாடையில் வைத்து மாலை போட்டுத் தூக்கிக் கொண்டு போனார்கள். மாரியையும் யாரோ தூக்கிக் கொண்டார்கள். அங்கு என்னென்னவோ நடந்தது. மாரிக்கு மொட்டை போட்டுக் கொண்டதில் ரொம்பவும் வருத்தம்.

மறுநாள் ரங்கனைப் பார்த்த போது, 'மொட்டை, மொழுக்கட்டை எனக்கு ரெண்டு கொழுக்கட்டை' என்று கேலி பேசுவான் என்று எதிர்பார்த்தான் மாரி. ஆனால் ரங்கனோ... ''பாவம் உங்க அப்பா செத்துப் போயிட்டாரு'' என்றான்.

மாரிக்கு ரங்கன் பாவமென்று தோன்றியது. இது கூடத் தெரியாமல் இருக்கிறானே. மாரி, ரங்கனுக்கு ஒரு குழந்தைக்குச் சொல்வது போல் சொன்னான். ''எங்கப்பா ஒண்ணும் செத்துப் போகலை; சாமிகிட்ட போயிருக்காரு.''

''இல்ல உங்கப்பா செத்துப் போயிட்டாரு; இனிமே திரும்ப வர மாட்டாரு.''

''அப்ப சாராயங் குடிக்கக் கூட வர மாட்டாரா?''

❒ கர்நாடக மாநிலத்தில் ஹுப்ளியில் நடந்த கன்னட சாஹித்ய சம்மேளனக் கூட்டத்தில் ஒருவர் மேடையேறிப் பொழிந்த இசை மழையில் அனைவரும் சொக்கிப் போனார்கள். பின்னர் அவர் சுற்றி வந்து பிச்சை கேட்ட போதும், அவர் கழுத்தில் தொங்கிய தங்க மெடலைக் கண்டும் அனைவர்க்கும் அதிர்ச்சி. விசாரித்ததில், அவர் பல ஆண்டுகளுக்கு முன்னால் மாநில அரசால் கௌரவிக்கப்பட்ட இசைக் கலைஞர் சென்ன பசவந்தப்பா என்றும், பிறகு எந்த வருவாயும் இல்லாமல், யாசகத்தாலேயே ஜீவனம் நடத்தி வருவதும், இலக்கிய ரசிகர்கள் சற்றுத் தாராளமாக உதவுவார்கள் என்று நம்பி சிரமப்பட்டு அக் கூட்டத்துக்கு வந்ததும் தெரிந்தது.

- ''சண்டே''

- அ. ஷண்முகசுந்தரம்.





தியேட்டர் மானேஜர் : இடைவேளை விட்டதும் ஏழெட்டுப் பேர் கூட்டமா வெளியே போறாங்களே படம் பிடிக்கலையாமா?

வாட்ச்மேன் : அவங்க பக்கத்து காலேஜில் படிக்கறவங்க. மறுபடியும் படம் ஆரம்பிக்கிறதுக்குள்ளாறே அட்டெண்டன்ஸ் கொடுத்திட்டு வந்திடறதாச் சொல்லிட்டுப் போறாங்க.

- கரம்

# நேரு வணங்கிய விநாயகர்




**சித்தி** விநாயகர், சக்தி விநாயகர் என்றெல்லாம் கேள்விப்பட்டிருப் பீர்கள். ஆனால், நேரு விநாயகரைத் தெரியுமா? மதுரையிலுள்ள ஒரு விநா யகருக்கு 'நேரு ஆலால சுந்தர விநாயகர்' என்று பெயர்! கர்ம யோகியான நேரு கோயிலுக்கு அதி கம் செல்லாதவர். அப்படிப்பட்ட நேருவே இக் கோயிலுக்கு வந்து தரிசனம் செய்ததால் அவர் பெய ரையும் விநாயகரோடு சேர்த்து விட்டார்கள் மதுரைவாசிகள்!

''வர மாட்டார். உங்கப்பாவுக்கு வயத் திலே புண்ணு அதான் செத்துப் போயிட டாரு.''

மாரி எதுவும் சொல்லாமல் எழுந்து வந்தான். 'அதெப்படி வயத்திலே புண்ணு வந்து செத்துப் போவாங்க. எனக்குக் கூட கால்ல கல்லுத் தட்டி புண்ணு வந்திருக்கு. நான் என்ன செத்தா போயிட்டேன்? ரங்கன் பொறாமைப்பட்டுச் சொல்லுதானோ? ஆமா... செத்துப் போறதுன்னா என்ன? அப்பா சாமிகிட்ட போவயிலே எல்லாரும் ஏன் அழுதாங்க? செத்துப் போறதும், சாமி கிட்டப் போறதும் ஒண்ணுதானோ..'

மாரிக்கு எதுவுமே புரியவில்லை. ஏதேதோ நினைத்தபடி வீட்டிற்கு வந்தான்.

பொன்னுத்தாய் திண்ணையில் உட் கார்ந்து எங்கோ வெறித்துப் பார்த்தபடி இருந்தாள். 'அம்மாகிட்டே கேக்கலாமா?' மாரி யோசித்தான். 'அவ மூஞ்சியே சரி யில்லே புளிக்கன்னு ரெண்டு குடுத்து டுவா!'

மாரி கோழிக் கூட்டருகே சென்றான். ஒரு குஞ்சைப் பிடித்துக் கையில் வைத் தான். அதன் பிஞ்சுக் கால்கள் பட்டு உடல் சிலிர்த்தது. எல்லாம் மறந்து போயிற்று!

**மா**ரி எத்தனை நேரம் கோவில் படிக்கட்டில் அமர்ந்திருந்தானோ தெரி யாது. மிட்டாயை இரண்டு கட்டெ றும்புகள் இழுத்துச் செல்ல முயன்றன. மாரி மீண்டும் கடவுளை வேண்டிக் கொண்டான். ஏதோ நம்பிக்கை பிறந்தாற் போலிருந்தது.

'அம்மா இந் நேரம் வந்திருப்பா. குஞ்சு பொரிச்சிருக்கும். பொரிக்க லைன்னா அடி வுழும்!'

மாரிமுத்துவின் கண் முன்னே சாட்டைக் கம்பு தோன்றியது. தெருமுனை திரும்பி நடந்தான். பொன்னுத்தாய் வாச லில் நின்று குரல் கொடுத்தாள், ''ஏல மாரி குஞ்சு பொரிச்சுருச்சில...''

மனமெங்கும் சந்தோஷம் பரவியது.

பொன்னுத்தாய் கோழியின் அடி வயிற்றிலிருந்து குஞ்சை வெளியே போட் டாள். மழையில் நனைந்தது போல வெட வெடவென்று நடுங்கியபடி நின்றன. கருஞ் செவலை நிறமாக இருக்கும். போன முறை இப்படித்தான் கறுப்பு நிறம் என்று நினைத்துக் கடைசியில் சாம்பல் நிறமாக வளர்ந்தது. மாரிமுத்துவிற்கு நிறம் பற்றிய அத்தனை வேறுபாடு தெரியாது என்ற போதும் இந்தக் குஞ்சு அழகாக இருப்ப தாகப் பட்டது.

''அம்மா இது ஏங்குஞ்சுதானே?'' மாரி பொன்னுத்தாயிடம் கேட்க, பொன்னுத் தாய் கரிசனத்தோடு அவன் தலையைக் கலைத்தபடி மார்போடு அணைத்துக் கொண்டாள். பிறகு குஞ்சை எடுத்துக் கோழியின் அடிவயிற்றில் போட்டாள். ''காயட்டும்...'' என்றாள்.

**அ**ன்று மாலை முழுவதும் மாரிக்கு சந்தோஷமாய் இருந்தது. ஒன்று, இரண்டு, மூன்று வரிசையாய்க் குஞ்சுகள் பொரித்துக் கொண்டிருந்தன.

மறுநாள் மைதானத்தில் அமர்ந்து நண்பர்களோடு பேசிக் கொண்டிருக் கையில் முட்டையை எடுத்துப் பார்த்ததில் இருந்து, சாமியிடம் வேண்டியது, குஞ்சு பொரித்தது என்று தன் வீரப் பிரதாபங் களையெல்லாம் சொன்னான்.

''உங்க அக்கா, பாப்பா புள்ள பெறப் போயிருக்கில்ல, சாமிகிட்ட வேண்டிக்க. பத்துப் பைசாவுக்கு ஆரஞ்சு வில்லை வாங்கி வை. நல்லபடியாப் பாப்பா புள்ள பொறக்கும். உனக்கு முடியலைன்னாச் சொல்லு... நான் சாமிகிட்ட வேண்டிக் கறேன்.'' நண்பனுக்கு யோசனை சொன்

## ம. கா. பல்கலைக்கழகம்:

# விதைநெல் இன்றியே நாற்றுக்கள்! உயிரியல் துறையின் சாதனைகள்!

**சா**தாரணமாகத் தோலில் ஏற்படுகிற புற அடையாளங்களைக் கொண்டுதான் அது தொழுநோய் என்று மருத்துவர்களால் அடையாளம் காண முடிகிறது. எனவே, இந்தப் புற அடையாளங்கள் கூட உடலுக்குள் சிறிது வளர்ச்சியடைந்து விட்ட தொழுநோயின் அறிகுறிகள் என்றுதான் சொல்ல வேண்டும். மதுரை காமராசர் பல்கலைக் கழகத்திலுள்ள School of Biological Sciences துறையினரின் கண்டுபிடிப்பின் மூலம், இனி இந்தப் புற அடையாளங்கள் தெரிவதற்கு முன்பாகவே ஒருவருக்குத் தொழுநோய் இருக்கிறதா என்பதைக் கண்டுபிடித்து விட முடியும்.

இதே மாதிரிதான் டைபாய்டு பற்றிய ஆராய்ச்சியும். ஒருவருக்கு வந்துள்ள காய்ச்சல் டைபாய்டுதானா என்பதைக் கண்டறிவதற்கே இப்போது ஒருவார காலம் கூட ஆகிவிடுகிறது. ஆனால் இவர்களின் கண்டுபிடிப்பைச் செயல்படுத்தும் போது இரண்டே மணி நேரத்தில் அது டைபாய்டா இல்லையா என்பதைக் கண்டுபிடித்துவிடலாம். இந்தச் சோதனையைச் சாதாரண கிராமத்தில் இருக்கும் ஒரு டாக்டர் கூட சுலபமாகச் செய்துவிட முடியும்.

இப்படி மனிதர்கள் தொடர்பான ஆய்வுகள் ஒரு புறமென்றால், மறுபுறம் விலங்குகள் தொடர்பான ஆய்வுகள். இப்போது கண்ணாடித் தொட்டிகளில் வைக்கப்படும் அழகு மீன்களின் உருவம் மிகவும் சிறிதாகத்தான் இருக்கின்றன. அதன் உருவத்தை இன்னும் கொஞ்சம் பெரிதாக்க முடியாதா என்று யோசித்து ஆராய்ந்தார்கள். விளைவு? இப்போதிருக்கும் உருவத்தைப் போல் ஒன்றரை மடங்கு அளவு பெரிதான உருவமுள்ள மீன்களை உற்பத்தி செய்ய முடியும் என்று கண்டுபிடித்து விட்டார்கள்.

இதே போல் ஜீன்களிலுள்ள குரோமோசோம்களின் எண்ணிக்கையை மாற்றி, ஒரு சமயத்தில் ஆண் இன மீன்களை மட்டுமே உற்பத்தி செய்ய முடியும். அப்படி ஓரின மீன்களை மட்டுமே உற்பத்தி செய்கிறபோது, அவை இனச் சேர்க்கைகளில் ஈடுபட வழியில்லை என்பதால் அவற்றின் வளர்ச்சி விரைவாகிறது என்றும் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

**தா**வரவியலிலும் விட்டு வைக்கவில்லை. நெல் விதைகளைக் கொண்டு நெல் நாற்றுக்களை உற்பத்தி செய்யாமல், நெற்பயிரின் திசுக்களைக் கொண்டு நெல் நாற்றுக்களை உற்பத்தி செய்கிறார்கள். இதனால், ஒரு நெற்பயிரிலிருந்து ஆயிரக்கணக்கான நாற்றுக்களை உற்பத்தி செய்ய முடியும் என்பதால், நாற்றுக்களுக்காகப் பயன்படுத்தப்படும் நெல்லில் பெரும் பகுதி நமக்கு மிச்சமாகும்.

---

னான்.

அந்த வாரம் முழுக்க யாரிடமும் அவனுக்குச் சாமி பற்றிய பேச்சாகவும், கோழிக் குஞ்சு பற்றிய பேச்சாகவும்தான் இருந்தது. மாரிக்கு அங்கு, இங்கு போக நேரமில்லை. காலையில் எழுந்ததும் கோழிக் குஞ்சுகளைத் திறந்து விடுவது, குருணையும், தண்ணீரும் வைப்பது, காகம், பருந்து போன்றவை குஞ்சுகளைத் தூக்க விடாமல் பார்த்துக் கொள்வது.... என்று ஏக வேலை இருந்தது.

இரண்டொரு நாளில் கோழி, குஞ்சுகளைக் கூட்டிக் கொண்டு வெளியே இரை தேடக் கிளம்பிற்று. மாரி முதலில் பொரித்த குஞ்சை மட்டும் தனியே பிரித்து இரை வைப்பான். அது மாரி வைக்கும் இரையை ஏறெடுத்தும் பார்ப்பதில்லை. ஆனாலும் மாரிக்கு அது, தான் வைக்கும் இரையைத் தின்று கொழு கொழுவென்று இருப்பதாகப் பட்டது.

**அ**ன்று மாரி பேச்சியம்மாளோடு களச்சிக்கல் விளையாடிக் கொண்டிருந்தான். திண்ணையில் விளையாடிக் கொண்டிருந்த போதும் முற்றத்தில் நின்ற கோழி மீது ஒரு கண் இருந்தது.

''ஒரி உள்ளக்கல்லு, உள்ளக்கல்லு சூரியன், சூரியன் தங்கச்சி, சுந்தரவல்லிக்கு நாளக்கழிச்சுக் கல்யாணம்...'' என்று பாடியபடி பேச்சியம்மா கல்லைத் தவற விடவும் மாரியின் முறை வந்தது.

''ஒண்ணாம் ஒண்ணு, ரெண்டாம்



டாக்டர் முத்துக்கருப்பன்



திசுவில் வளரும் நெற்பயிர்.....

இப்படி ஏராளமான ஆராய்ச்சிகளை மேற்கொண்டிருக்கும் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் உயிரியல் துறை இந்தியாவிலேயே சிறந்ததாகச் சொல்கிறார்கள். இப்படிப்பட்டதோர் அமோக வளர்ச்சிக்கு அடிப்படைக் காரணம் என்ன?

''எங்கள் துறையிலுள்ள ஆசிரியர்களை, நாங்கள் பல்வேறு இடங்களிலும் தேடிப் பிடித்துத் திறமையானவர்களைக் கண்டறிந்து நியமிப்பதுதான் காரணம்'' என்கிறார் தடுப்பாற்றலியல் பேராசிரியரும் அங்குள்ள உயிரியல் தொடர்பான ஒன்பது துறைகளின் ஒருங்கிணைப்பாளருமான டாக்டர் வி.ஆர். முத்துக்கருப்பன்.

''இப்படி ஆர்வமும் திறமையும் உள்ளவர்களாகத் தேடிப் பிடித்து ஆசிரியர்களாக நியமிக்கப்படுவதால் அவர்களும் இங்கே புதிய கண்டு பிடிப்புக்களுக்கான ஆராய்ச்சிகளை மேற்கொள்கிறார்கள். அதனால் நல்ல பயன் விளைகிறது'' என்கிறார் டாக்டர் முத்துக்கருப்பன்.

இங்கு புதிதாக ஆராய்ச்சி செய்பவர்களுக்கு ஒரு வசதி. அவர்கள் எந்தத் துறையில் ஆய்வு செய்ய விரும்புகிறார்களோ, அந்தத் துறையில் இதுவரை உலகளாவிய அளவில் யார் யார் எதுவரை ஆய்வு செய்திருக்கிறார்கள் என்பதை நிமிஷத்தில் கண்டுபிடித்து விடலாம். சாட்டிலைட் மூலம் இணைக்கப்பட்ட டேட்டா வசதியுள்ள கம்ப்யூட்டர் இருப்பதால் புதிய ஆராய்ச்சியாளருக்கு மிகவும் உதவிகரமாய் இருப்பதோடு அனாவசியமான காலவிரயமும் தடுக்கப்படுகிறது.

காமராசர் பல்கலைக் கழகத்திலுள்ள இந்தத் துறையினர் மட்டும் கடந்த பத்தாண்டுகளில் (80-90) ஆய்வுகளுக்காக இருபத்தைந்து கோடி ரூபாயை மான்யமாகப் பெற்றிருக்கிறார்கள். பல துறைகளுக்கு வழங்கப்படும் மான்யங்கள் வீணாகப் போய்க் கொண்டிருக்கும் இந்தக் காலத்தில் இங்கு அது நல்ல முறையில் பயன்படுத்தப்படுவதைப் பார்க்கும் போது உண்மையிலேயே சந்தோஷமாகத்தான் இருக்கிறது.

- பிரின்ஸ்

ரெண்டு, மூணாம்...'' என்று சொல்ல ஆரம்பித்தவன் ஏதோ நினைத்துக் கொண்டவனாய் முற்றத்தில் பார்வையைச் செலுத்தினான். ஒரு பருந்து தாழ்வாய்ப் பறந்து வந்து, கறுப்புக் குஞ்சைத் தூக்கிச் சென்றது.

''ஹோஸ்... ஹோஸ்...'' மாரி குரல் கொடுத்தபடியே களச்சிக்கல்லைத் தூக்கி எறிந்து பருந்தை விரட்டினான். பருந்து முற்றம் கடந்து எதிர்வீட்டுத் தொழுவத்தின் மேல் பறந்து சென்றது.

''ஹோஸ்...'' மாரி ஒரு கல்லை எடுத்துப் பலம் கொண்ட மட்டும் வேகமாய் எறிய, பருந்தின் கால்களிலிருந்து நழுவிக் குஞ்சு சொத்தென்று தரையில் விழுந்தது.

மாரி ஓடிச் சென்று குஞ்சைக் கையில் எடுத்தான். கையில் ரத்தம் வழிந்தது. அதன் தலை சாய்ந்து கண்கள் திறந்தபடி இருந்தன. மாரி அம்மாவிடம் ஓடினான்.

''அம்மா....''

மாரியின் கையில் இருந்த குஞ்சைப் பார்த்தபடி ''அய்யய்யோ செத்துப் போச்சா... அல்பாயுசு.. .கழுதயத் தூக்கி எருக்குழியில போடு...''

பொன்னுத்தாய் சர்வ அலட்சியமாய்ச் சொன்னாள்.

''செத்துப் போச்சுன்னா இனிமே வராதா?''

''வராதுடா... அவ்வளவுதான்!'' என்று எரிச்சலோடு சொன்னாள்.

ஒருகணம் மௌனமாய் நின்ற மாரி, பெருங்குரலெடுத்து ''அப்பா'' என்று அலறினான்.

# மதுவை விலக்கு சிரிப்பை அல்ல!

**கருத்து: சந்திரமௌலி**

மதுவிலக்கு பிரசாரத்துக்குத் தமிழ்நாடு அரசு திரைப்படம் எடுக்க உள்ளது:

முதல்வர் அறிவிப்பு























# சிவகாமியின் சபதம்

## இருபத்து மூன்றாம் அத்தியாயம்

## அபயப் பிரதானம்

"சிவகாமி! மெய்யாகவே நீதானா? அல்லது என் கண்கள் என்னை ஏமாற்றுகின்றனவா?" என்று நாக நந்தியடிகள் போலி அவநம்பிக்கையுடன் கேட்டார்.

"அடிகளே! நான்தான்; அனாதைச் சிவகாமிதான்; இந்த ஏழைச் சிற்பியின் மகளைக் காப்பாற்றுங்கள் சுவாமி!"

"அப்படிச் சொல்லாதே, அம்மா! நீயா அனாதை? நீயா ஏழை? பல்லவ ராஜ்யத்தின் குமார சக்கரவர்த்தி மாமல்லப் பிரபுவின் காதலுக்குரிய பாக்கியசாலியல்லவா நீ? மண்டலாதிபதியான மகேந்திர பல்லவரின் மருமகளாகப் போகிறவளல்லவா?"

"சுவாமி! என்மேல் பழி தீர்த்துக் கொள்ள இது சமயமல்ல! தங்களை ரொம்பவும் வேண்டிக் கொள்கிறேன். காப்பாற்ற வேண்டும்" என்று சிவகாமி அலறினாள்.

"பெண்ணே! காவித் துணி தரித்த ஏழைப் பரதேசி நான்! என்னால் உன்னை எப்படிக் காப்பாற்ற முடியும்?"

"தங்களால் முடியும், சுவாமி! தங்களால் முடியும்! தாங்கள் மனது வைத்தால் கட்டாயம் காப்பாற்ற முடியும்."

"இவர்களிடம் நீ எப்படிச் சிக்கிக் கொண்டாய்? கோட்டைக்குள்ளிருந்து ஏன் வெளியே வந்தாய்? எப்படி வந்தாய்?"

"அதையெல்லாம் இப்போது கேட்க வேண்டாம், சுவாமி! மூடத்தனத்தினால் வெளியே வந்தேன். என் அருமைத் தந்தைக்கு நானே யமனாக ஆனேன்!... நான் எக்கேடாவது கெட்டுப் போகிறேன். என் தந்தையைக் காப்பாற்றுங்கள்...."

"உன் தந்தை எங்கே, அம்மா? அவருக்கு என்ன ஆபத்து வந்திருக்கிறது?" என்றார் பிக்ஷு.

"ஐயோ! இவர்களைக் கேளுங்கள். அப்பா எங்கே என்று இவர்களைக் கேளுங்கள்! சற்று முன்னால் ஏதோ பயங்கரமான வார்த்தை என் காதில் விழுந்தது. அதோ அந்தக் குதிரைமேல் இருப்பவர் சொன்னார். ஆயனர் எங்கே என்று அவரைக் கேளுங்கள். சுவாமி! சீக்கிரம் கேளுங்கள்!"

இப்படிச் சிவகாமி சொல்லிக் கொண்டிருந்தபோதே சற்றுப் பின்னால் குதிரை மேல் வீற்றிருந்தபடி மேற்கூறிய காட்சியைக் கவனித்துக் கொண்டிருந்த தளபதி சசாங்கன் குதிரையைச் செலுத்திக் கொண்டு அவர்கள் அருகில் வந்து சேர்ந்தான்.

"புத்தம் சரணம் கச்சாமி!" என்று நாக நந்தியைப் பார்த்துப் பரிகாசக் குரலில் கூறி வணங்கினான்.

வாதாபிச் சக்கரவர்த்தியிடம் நாகநந்தி பிக்ஷுவுக்கு இருந்த செல்வாக்கைக் குறித்துப் பொறாமை கொண்டவர்களில் தளபதி சசாங்கனும் ஒருவன்.

"புத்தம் சரணம் கச்சாமி!" என்று நாகநந்தியும் கடுகடுத்த குரலில் கூறினார்.

"ஆ! நாகநந்தி பிக்ஷுவே! திடீரென்று

அமரர் **கல்கி**

இங்கே எப்படி முளைத்தீர்? நாகம் இத்தனை நாளும் எந்த வளையில் ஒளிந்து கொண்டிருந்தது? இப்போது ஏன் வெளியில் தலையை நீட்டுகிறது?'' என்று தளபதி சசாங்கன் கேட்டான்.

கேட்டவர்கள் நடுங்கும்படியான நாகப்பாம்பின் சீறல் சத்தம் அப் போது திடீரென்று கேட்டது.

அதே சமயத்தில் ''பாம்பு! பாம்பு!'' என்று ஒரு கூக்குரல். அதைக்கேட்ட அங்கே கூடியிருந்த வீரர்கள் சிதறி ஓடினார்கள்.

நாகப்பாம்பு ஒன்று சரசரவென்ற சப்தத்துடன் தளபதி சசாங்கன் ஏறியிருந்த குதிரையின் கால்மீதேறி ஊர்ந்து அப்பாலிருந்த புதருக்குள் விரைந்து சென்று மறைந்தது.

''தளபதி! ஜாக்கிரதை! சாதாரணமாய் நாகப்பாம்பு கடிக்காது. ஆனால் கடித்து விட்டால் அதன் விஷம் ரொம்பப் பொல்லாதது!'' என்றார் பிக்ஷு.

சசாங்கன் பல்லைக் கடித்துக் கொண்டு, ''பிக்ஷு.... இந்த அருமையான உண்மையைச் சொன்னதற்காக மிகவும் வந்தனம். எனக்கு அலுவல் அதிகம் இருக்கிறது. தங்களுடன் பேசிக் கொண்டிருக்க இப்போது நேரமில்லை. மன்னிக்க வேண்டும்.... அடே! இந்தப் பெண்ணைப் பிடித்துக் கட்டுங்கள்!'' என்று சற்று விலகிப் போய் நின்ற வீரர்களைப் பார்த்துச் சசாங்கன் சொன்னான்.

அதைக் கேட்ட வீரர்கள் சிவகாமியை நெருங்கி வந்தார்கள்.

''தளபதி! தென்னாட்டின் புகழ்பெற்ற நடன கலைவாணியைச் சிறைப் பிடித்தது உம்முடைய அதிர்ஷ்டந்தான். இந்த விசேஷ சம்பவத்தைச் சக்கரவர்த்தியிடம் நான் கூடிய சீக்கிரம் தெரியப்படுத்துகிறேன்....''

''ஓஹோ! அப்படியானால் பிக்ஷுவும் வாதாபியை நோக்கித்தான் பிரயாணம் கிளம்பியிருப்பது போல் தெரிகிறது....''

''ஆம், சசாங்கரே! ஆனால் சக்கரவர்த்தியிடம் இந்த விசேஷச் செய்தியைத் தெரிவிப்பதற்கு வாதாபி வரையில் நான் போக வேண்டியதில்லை. சற்று முன்னால் இந்தக் காட்டில் இன்னொரு புறத்தில் சக்கரவர்த்தியைப் பார்த்தேன்....''

''பொய்! பொய்! வாதாபிச் சக்கரவர்த்தி இதற்குள் வட பெண்ணை நதியை அடைந்திருப்பார்.''

''பொய்யும் மெய்யும் விரைவிலே தெரியும், தளபதி! ஆனால் ஒரு விஷயத்தை ஞாபகம் வைத்துக் கொள்ளும். புலி தனக்கு இரையாகக் கொள்ள எண்ணிய மானின் மீது பூனை கண்ணைப் போட்டால் விபரீதம் விளையும். ஞாபகமிருக் கட்டும்!'' என்று நாகநந்தி கம்பீரமான குரலில் கூறிய போது, தளபதி சசாங்கனின் வாயிலிருந்து 'உம்', 'உம்' என்ற உறுமல் ஒலியைத் தவிர வேறெதுவும் வரவில்லை.

பின்னர், நாகநந்தி சிவகாமியைப் பார்த்து, ''பெண்ணே! நான் சொல்வதைக் கவனமாகக் கேள். அதன்படி நடந்து கொண்டால் உனக்கு ஒரு அபாயமும் நேராது. இவர்களுடன் தடை சொல்லாமல் போ! நீ நடனக் கலை பயின்றவளாதலால், உன் கால்களில் வேண்டிய பலம் இருக்கும். நடப்பதற்கு நீ அஞ்சமாட்டா யல்லவா?'' என்றார்.

இதுவரை சசாங்கனுக்கும் நாகநந்திக்கும் நடந்த சம்பாஷணையைக் கவனித்த வண்ணம் கற்சிலைபோல் அசைவற்று நின்ற சிவகாமி சட்டென்று உணர்வு வரப் பெற்றவளாய், ''சுவாமி! என்னைப் பற்றி எனக்கு ஒரு கவலையுமில்லை. இந்தப் பாவியினால் தங்கள் சிநேகிதர் ஆயனர் பெரும் அபாயத்துக்கு உள்ளாகி விட்டார். ஐயோ! அவரைக் காப்பாற்றுங்கள்!'' என்று கதறினாள்.

உடனே நாகநந்தி பிக்ஷு, ''தளபதி! இந்தப் பெண்ணின் தந்தை எங்கே?'' என்று கேட்க, சசாங்கன் ஒரு கோரச் சிரிப்புச் சிரித்தவண்ணம், ''ஆஹா! உங்களுக்கு அது தெரியவேண்டுமா? சொல்கிறேன். பல்லவ நாட்டிலுள்ள சிற்பிகளையெல்லாம் ஒரு காலையும் ஒரு கையையும் வெட்டிப் போடும்படி சக்கரவர்த்தியின் கட்டளை; இவளுடைய தந்தை பெரிய மகா சிற்பி யல்லவா? அதற்காக அவருக்கு மரியாதை செய்யும் பொருட்டு இரண்டு கையையும் இரண்டு காலையும் வெட்டிப் போடச் சொல்லியிருக்கிறேன்! அதோ தெரியும் அந்தப் பாறைமேல் கொண்டு போய்ச் சுற்றுப் பக்கமெல்லாம் தெரியும்படியாகக் காலையும் கையையும் வெட்டிக் கீழே உருட்டிவிடச் சொல்லியிருக்கிறேன். காஞ்சிக் கோட்டை மதிலிலிருந்து பார்ப்பவர்களுக்குத் தெரிய வேண்டுமென்றுதான் பாறை உச்சிக்குக் கொண்டு போகச் சொன்னேன்'' என்றான் சசாங்கன். இவ்விதம் சொல்லிவிட்டு மீண்டும் அவன் பயங்கரமாகச் சிரித்தான்.

சசாங்கன் பேசுகிற வரையில் அவனுடைய முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த சிவகாமி அவன் பேசி முடித்ததும், விவரிக்க முடியாத பயங்கரமும் வேதனையும் நிறைந்த கண்களினால் நாகநந்தியைப் பார்த்து, ''அடிகளே!'' என்று கதறினாள்.

அப்போது நாகநந்தி, ''பெண்ணே! என் வார்த்தையில் நம்பிக்கை வை. உன் தந்தையை நான் காப்பாற்றுகிறேன். மன

நிம்மதியுடன் நீ இவர்களோடு போ!'' என்றார்.

அப்போது சசாங்கன், ''பிக்ஷு! வாதாபிச் சக்கரவர்த்தியின் கட்டளைக்குக் குறுக்கே நிற்பவருக்கு என்ன தண்டனை தெரியுமல்லவா? அது தங்களுக்கும் ஞாபகம் இருக்கட்டும்!'' என்று கூறி விட்டுச் சிவகாமியைப் பார்த்து, ''பெண்ணே! இந்தப் பிக்ஷு உனக்குச் சொன்ன புத்திமதி நல்ல புத்திமதிதான். அதன் பிரகாரம் தடை ஒன்றும் சொல்லாமல் எங்களுடன் வந்து விடு!'' என்றான்.

# இருபத்து நான்காம் அத்தியாயம்
# அட்டூழியம்

ஆயனரின் உள்ளம் சிந்தனா சக்தியை அடியோடு இழந்திருந்தது. தன் கண்ணால் பார்த்தது, காதால் கேட்டது ஒன்றையுமே அவரால் நம்ப முடியவில்லை. இவையெல்லாம் கனவிலே நடக்கும் நிகழ்ச்சிகளா, உண்மையில் நடக்கும் சம்பவங்களா என்பதையும் அவரால் நிர்ணயிக்கக் கூடவில்லை!

உலகத்தில் மாநிலத்தை ஆளும் மன்னர்கள் யுத்தம் செய்வது இயற்கைதான். அதில் நம்பமுடியாதது ஒன்றுமில்லை. அப்படி யுத்தம் செய்யும் அரசர்கள் போருக்கு அனுப்பும் வீரர்களுக்கு, ''ஸ்திரீகளையும், குழந்தைகளையும், வயோதிகர்களையும், பசுக்களையும், கலைஞர்களையும் ஹிம்சிக்கக்கூடாது!'' என்று கட்டளை விடுவதுண்டு. அரசர்கள் பொல்லாத மூர்க்கர்களாயும் கருணையற்றவர்களாயுமிருந்தால், அவ்வளவு சிரத்தை எடுத்துக் கட்டளையிட மாட்டார்கள்.

ஆனால், சாம்ராஜ்யம் ஆளும் சக்கரவர்த்தி ஒருவர் தம் படை வீரர்களுக்கு, 'சிற்பிகளையெல்லாம் காலையும் கையையும் வெட்டிப் போட்டுவிடு!' என்று ஆக்ஞை இடுவது நடக்கக்கூடிய சம்பவமா? அம்மாதிரிக் கட்டளையிடக்கூடிய ராட்சதர்கள் இராஜ்ய சிம்மாசனத்தில் ஏறி வீற்றிருக்க முடியுமா? அந்த நாட்டின் பிரஜைகள் அதைப் பொறுத்துக் கொண்டிருப்பார்களா?

அதிலும், புலிகேசிச் சக்கரவர்த்தியா அப்படிப்பட்ட கட்டளை பிறப்பித்திருப்பார்? எவருடைய இராஜ்யத்தில் உலகத்திலேயே இல்லாத கலை அதிசயங்கள்- என்றும் அழியாத வர்ணங்களில் தீட்டப்பட்ட அற்புத ஜீவ சித்திரங்கள்- உள்ளனவோ, அந்த இராஜ்யத்தின் மன்னரா அப்படிப்பட்ட கொடூரமான கட்டளையை இட்டிருப்பார்? அப்படி அவர் கட்டளையிட்டிருப்பதாக அந்தக் குரூர முகம் படைத்த தளபதி கூறியது உண்மையாயிருக்க முடியுமா? அவன் சொன்னதாகத் தம் காதில் விழுந்தது மெய்தானா?

அவனுடைய கொடூர மொழிகளைக் கேட்டுச் சிவகாமி உணர்விழந்து தரையில் விழுந்தது உண்மையா? அவளைத் தாங்கிக் கொள்ளத் தாம் ஓடியபோது வாதாபி வீரர்கள் தங்களுடைய இரும்புக் கரங்களினால் தம்மைப் பிடித்துக் கொண்டதும் உண்மையாக நடந்ததுதானா? பிறகு அந்தப் படைத் தலைவன் இட்ட கட்டளை மெய்தானா? 'அதோ அந்தப் பாறை முனைக்கு அழைத்துப் போய்க் கோட்டையிலுள்ளவர்களுக்குத் தெரியும்படி காலையும் கையையும் வெட்டிக் கீழே உருட்டி விடுங்கள்!' என்ற மொழிகள் தாம் உண்மையாகக் கேட்டவைதானா?

அல்லது இவ்வளவும் ஒரு பயங்கரக் கனவில் நடந்த சம்பவங்களா? இந்தப் பாறைமீது தாம் ஏறுவதும், தம் கால்களைத் தள்ளாடுவதும் நிஜமா? அல்லது வெறும் சித்தப் பிரமையா?

இவையெல்லாம் வெறும் பிரமைதான்! அல்லது கனவுதான். ஒருநாளும் உண்மையாக இருக்க முடியாது.

ஆனால், அதோ தெரிகிறதே, காஞ்சிக் கோட்டை, அதுகூடவா சித்தப் பிரமையில் தோன்றும் காட்சி?

இல்லை, இல்லை! காஞ்சிக் கோட்டை உண்மைதான். தம்மைப் பாறை முனையில் கொண்டுவந்து நிறுத்தியிருப்பதும் உண்மைதான்; இதோ இந்த ராட்சதர்கள் தம் கைகளைப் பிடித்துக் கொண்டிருப்பதும், கைகளை வெட்டுவதற்காகக் கத்தியை ஓங்குவதும் நிச்சயமாக நடக்கும் சம்பவங்கள்தான்.

ஆ! சிவகாமி! என் அருமை மகளே! இந்தப் பாவி உன்னை என்ன கதிக்கு உள்ளாக்கிவிட்டேன்! என் அஜந்தா வர்ணப் பைத்தியத்துக்கு உன்னைப் பலிகொடுத்து விட்டேனே, ஐயோ! என் மகளே! மகளே!

வீரர்களில் ஒருவன் கத்தியை ஓங்கிய போது ஆயனர் தம் கண்களை இறுக மூடிக் கொண்டார். ஆனால், ஓங்கிய கத்தி அவர்

எதிர் பார்த்தபடி அடுத்தகணம் அவருடைய கையை வெட்டவில்லை. ''நிறுத்து!'' என்று அதிகாரக் குரலில் ஓர் ஒலி கேட்டது. ஆயனர் கண்ணைத் திறந்து பார்த்த போது.... ஆஹா! இதென்ன? புலிகேசிச் சக்கரவர்த்தியல்லவா இவர்? இங்கு எப்படி வந்து சேர்ந்தார்?

சக்கரவர்த்தியைப் பார்த்த வியப்பினால் ஆயனரைப் பிடித்துக் கொண்டிருந்த வீரர்கள் திடீரென்று கைப்பிடியை விட்டார்கள். பக்கத்திலிருந்த பள்ளத்தில் ஆயனருடைய கால் நழுவிற்று. கீழே பூமி வரையில் சென்று எட்டிய அந்த மலைச் சரிவில் ஆயனர் உருண்டு உருண்டு போய்க் கொண்டிருந்தார். சிறிது நேரத்துக்கெல்லாம் தம் உணர்வை இழந்தார்.

ஆயனருக்குச் சுய உணர்வு வந்தபோது, அருகில் ஏதோ பெருங் கலவரம் நடப்பதாகத் தோன்றியது. பல மனிதர்களின் கூச்சலும் கற்கள் மோதும் சத்தமும் கலந்து கேட்டன. முன்னம் கேட்ட அதே அதிகாரக் குரலில், ''நிறுத்து!'' என்ற கட்டளை எழுந்தது.

ஆயனர் கண்களைத் திறந்து பார்த்தார். அரண்ய மத்தியில் இருந்த தமது பழைய சிற்பக் கிருஹத்துக்குள் தாம் இருப்பதைக் கண்டார். சுற்றுமுற்றும் பார்த்தார்; வாதாபிச் சக்கரவர்த்தி கம்பீரமாய் நின்று கையினால், ''வெளியே போங்கள்!'' என்று சமிக்ஞை செய்ய, மூர்க்க வாதாபி வீரர்கள் கும்பலாக வாசற் பக்கம் போய்க் கொண்டிருப்பதைப் பார்த்தார்.

வீட்டுக்குள்ளே தாம் அரும்பாடு பட்டுச் சமைத்த அற்புதச் சிலைகள் - அழகிய நடன வடிவங்கள் தாறுமாறாய் ஒன்றோடொன்று மோதப்பட்டு அங்கஹீனம் அடைந்து கிடப்பதைக் கண்டார். அப்போது அவருடைய உடம்பின்மேல் யாரோ ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவது போல் இருந்தது. பழுதடைந்த சிலைகளை அருகில் போய்ப் பார்க்கலாமென்று எழுந்தார். அவருடைய வலது காலில் ஒரு பயங்கரமான வேதனை உண்டாயிற்று. எழுந்திருக்க முடியவில்லை. தமது வலது கால் எலும்பு முறிந்து போய்விட்டது என்பது அப்போதுதான் ஆயனருக்குத் தெரிந்தது.

அச்சமயம் பின்கட்டிலிருந்து ஆயனருடைய சகோதரி உடல் நடுங்க, கண்களில் நீர் பெருக, ஓடிவந்து ஆயனர் அருகில் விழுந்தாள். பாவம் சற்று முன்னால் அந்தச் சிற்பக் கிருஹத்தில் வாதாபி வீரர்கள் செய்த அட்டகாசங்களைப் பார்த்து அவள் சொல்ல முடியாத பீதிக்கு ஆளாகியிருந்தாள்.

எல்லா வீரர்களும் வீட்டுக்கு வெளியே போன பிறகு, வாதாபிச் சக்கரவர்த்தி சாந்தமாக நடந்து ஆயனர் கிடந்த இடத்துக்கு அருகில் வந்தார். ஆயனர், ''பிரபு! தங்களுடைய வீரர்கள் இம்மாதிரி அட்டூழியங்களைச் செய்யலாமா?'' என்று கதறினார்.

(தொடரும்)

# அருள்வாக்கு

இந்தக் காலத்தில் பண்டிதர் என்று இருப்பவரையே, ''வேதத்தில் ஒரு பதம் புரியவில்லை; அர்த்தம் சொல்லுங்கள்'' என்று கேட்டால், ''பாஷ்யத்தைப் பார்த்துக் கொண்டு வந்து பதில் சொல்கிறேன்'' என்கிறார்! காலத்துக்கேற்ப குரு பீடத்தில் நான் இருக்கிறேன்!

அதனால் - ஒரு விதத்தில் - Self interest (ஸ்வயநல அக்கறை) என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள் - குரு பீடங்கள் நல்ல நிலைமையில் ஸகல சாஸ்த்ரங்களிலும் நல்ல ஞானத்துடன் விளங்குமென்பதற்காகவாவது ஸகல ஜனங்களும் நல்ல வித்வத் உள்ளவர்களாக ஆக வேண்டுமென்கிறேன். சிஷ்யர்களின் தரத்தைப் பொறுத்துத்தான் குரு உருவாகிறார். சிறந்த அறிவாளிகளாக சிஷ்யர் கூட்டம் இருந்துவிட்டால் அதற்குத் தகுந்தாற்போல் குருவும் தம் நிலையை உயர்த்திக் கொள்ள வேண்டுமென்று நிர்ப்பந்தமாகவாவது ஏற்பட்டு விடுகிறது. அவர்கள் ஒன்றைக் கேட்டு இவர் முழிக்கப்படாதல்லவா? அதனால்! ஆனபடியால் குருபீடங்களிலுள்ள குருமார்கள் நன்றாக சாஸ்த்ரார்த்தம் அறிந்தவர்களாய் இருக்க வேண்டுமென்றால் அதன் பொறுப்பு சிஷ்யர்களதுதான்.



**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

# திசை மறந்த பறவைகள்

போட்டி நாடகம் 50

## காட்சி - 1

(தலைமை ஆசிரியர் வாகதேவன் வீடு.)

வாசு : சேகர்! உனக்கே இது அழகா இருக்கா! எம்.பி.பி.எஸ். படிச்சு முடிச்சுட்டு இப்ப சினிமாவில நடிக்கப் போறேங்கிறேயே?

சேகர் : அப்பா! நான் சொல்றதைத் தயவு செஞ்சு சரியாப் புரிஞ்சுக்கங்க! நான் டாக்டர் தொழிலையே விட்டுட்டு சினிமா நடிகனாகப் போறதில்லை.

வாசு : பின்னே... உன் பேச்சுக்கு என்ன அர்த்தம்?...

சேகர் : சொந்தமா கிளினிக் நடத்த இருபத்தைந்தாயிரம் தர்றேன்னு சொல்றீங்கல்ல...

வாசு : ஆமா!...

சேகர் : அந்தப் பணத்தை ஒரு புரெட்யூசர் கிட்ட கொடுத்து ஒரு படத்துல நான் ஹீரோவா நடிச்சுடுறேன்... படம் வெளி வந்தவுடனே, நானும் டாக்டர் தொழிலுக்குத் திரும்பி வந்துடுறேன். அப்புறம் பாருங்க என் பிராக்டீஸை... பேஷண்டுக்காக டாக்டர் காத்திருக்கிறது போயி, டாக்டருக்காக பேஷண்டுகள் கூட்டம் கூட்டமாகக் காத்திருப்பாங்க...

வாசு : இது விபரீதமான கற்பனை!...

சேகர் : இல்லை..... யதார்த்தமான உண்மை... என் பிரண்டு எம். ஏ. படிச்சிட்டு வேலைக்காக அலைஞ்சான்... வேலை கிடைக்கலை... இதே போல இருபத்தையாயிரத்தைக் குடுத்து, ஒரு படத்துல நடிச்சிட்டு வந்து, பக்கத்து சிட்டில ஒரு டுட்டோரியல் காலேஜ் ஆரம்பிச்சான்.. இப்ப அவன் கிட்டதான் அதிகமான ஸ்டூடண்ட்ஸ் படிக்கிறாங்க... புது பில்டிங் கட்டி, பிரபலமான சினிமா நடிகரை வச்சு, திறப்பு விழா நடத்தினான்.. இப்ப அந்த நடிகரோட ஸ்டூடண்ட் ரசிகர்கள் அத்தனை பேரும் அவன் டுட்டோரியல் காலேஜிலதான் படிக்கிறாங்க!...

வாசு : வெளிய சொன்னா சிரிக்கப் போறாங்க!...

சேகர் : சொன்னாச் சிரிப்பாங்க... ஆனா... செய்து காட்டிட்டா சிரிக்கிற அதே ஆளுங்க வாய் விட்டுப் பாராட்டுவாங்க...

ஸ்ரீசவிதா

(அறிமுக எழுத்தாளர்)

வாசு : சேகர்!..... (உணர்ச்சியுடன்) உங்கம்மா, உடம்புக்கு முடியாம படுத்திருந்தப்போ, இந்தக் கிராமத்துல டாக்டர் இல்லாததுனால, பக்கத்துப் பட்டணத்துக்குப் போயி டாக்டரைக் கூட்டிக்கிட்டு வர்றதுக்குள்ளே அவ போய்ச் சேர்ந்துட்டா!..... (வைராக்கியத்துடன்) அன்னிக்கு நான் எடுத்த முடிவுதான் இன்னிக்கு நீ டாக்டராயிருக்கே... உன்னை டாக்டராக்குறதுக்காக, இந்த வாத்தியார் உத்தியோகத்துல, நான் சம்பாதிச்சு, வயத்தைக் கட்டி, வாயைக் கட்டி சேமிச்ச பணம், சொத்து வித்த பணம் அத்தனையும் செலவாயிடுச்சு.. அது மட்டுமில்லப்பா... ஒரு டாக்டரை



உருவாக்கறதுக்குப் பெத்தவங்க மட்டும் செலவழிக்கலைப்பா... அரசாங்கமும் ஆயிரக்கணக்குல செலவழிக்குது... சரியான நேரத்துல ஒரு டாக்டரோட சேவை கிடைக்காம, உன் அம்மாவை நான் இழந்தேன். இந்தக் கிராமத்து ஜனங்களுக்கு அப்படியொரு நிலைமை ஏற்படக் கூடாதுன்னு நினைக்கிறேன்... என் நம்பிக்கையைப் பாழாக்கிடாதே. சேகர்..

சேகர் : நிச்சயமாப் பாழாக்க மாட்டேன். ஆனா என் முடிவுல இருந்து மாறவும் மாட்டேன். நான் நிச்சயம் சினிமாவில நடிக்கத்தான் போறேன். நீங்க இந்தக் கிராமத்துல என்னை ஒரு கிளினிக் நடத்தச் சொல்றீங்க! ஆனா நான் ஒரு ஹாஸ்பிடலையே நடத்தப் போறேன்... நான் வர்றேன்...

(வெளியே போகிறான். அப்போது குமார் வருகிறார்)

குமார் : வாசு!... வாசு!...

வாசு : யாரது....? யார் சார்!... வாங்க!.... என்ன வேணும் உங்களுக்கு?...

குமார் : முதல்ல உங்களைக் கட்டித் தழுவ ணும்...

வாசு : (திடுக்கிட்டு) கட்டித் தழுவணுமா?

குமார்: அப்புறம்... இந்த வழுக்கைத் தலையில ரெண்டு குட்டுக் குட்ட ணும்...

வாசு : சார்... யார் நீங்க? என் வீட்டுக்குள்ள வந்துக்கிட்டு, அர்த்தமில்லாம ஏதேதோ பேசிக்கிட்டு...

குமார் : (கோபத்துடன்) இன்னமும் இந்த குமாரசாமியைப் புரிஞ்சிக்காததுக்காக கூட நாலு குட்டுக் குட்டணும்...

வாசு : குமாரசாமி!.. நீயா...!

குமார் : அப்பாடா.. இப்பவாவது புரிஞ்சுக் கிட்டியே.. இப்ப உன் பால்ய சிநேகிதன் குமாரசாமியோட பேரு குமார்...

வாசு : குமாரசாமிங்கற பேரு நல்லாத் தானே இருக்கு?..

குமார் : தொழிலுக்காகப் பேரைச் சுருக்கி, ஸ்டைலா குமார்னு வச்சுக்கிட்டேன்!...

வாசு : ஸ்டைலா பேரு வைக்கிற அளவுக்கு என்னடா தொழில் பண்றே?

குமார் : பிரபல சினிமா டைரக்டர்.



வாசு : (அருவருப்புடன்) சினிமாவா...

குமார் : ஆமா வாசு!.. இன்னிக்குக் கூட உங்க கிராமத்துல நான் ஷூட்டிங் நடத்தப் போறேன்... உங்க கிராமமே அங்கே திரண்டு வந்து நிக்குது... உனக்குத் தெரியாதா!...

வாசு : ஏன் தெரியாமல்? என் பள்ளிக் கூடத்துப் பையனுங்க அத்தனை பேரும் ஸ்கூலுக்கு வராம, படம் எடுக்கிற எடத்துக்குப் போயிட்டாங்க... ஸ்கூலுக்கு லீவு விட்டுட்டு பள்ளிக்கூடத்தைப் பூட்டிட்டு சாவியை எடுத்துட்டு வந்திட்டேன்.

குமார் : இந்தக் காலத்துல மக்களுக்கு சினிமா, அபிமானம் கொஞ்சம் ஜாஸ்தியாத்தான் இருக்கு!...

வாசு : கொஞ்சம் என்ன? நிறையவே இருக்கு. எங்கே பார்த்தாலும் சினிமா... யாரைப் பார்த்தாலும் சினிமாப் பேச்சு... இதனால என் குடும்பமே பாதிக்கப்பட்டிருக்கு.

குமார் : வாசு!... என்னப்பா சொல்றே!

> ## சுலபமாகச் சம்பாதிக்க....
>
> **கௌரவமாகக் கொள்ளையடிப்பதற்கு அரசியலில் நுழைவதுதான் சுலபமான வழி என்று யாராவது நினைத்துக் கொண்டிருந்தால் அவர்களுக்கு இன்னொரு சுலபமான வழியும் இருக்கிறது. அதுதான் மதுரை நகரில் ஆட்டோ ஓட்டுவது. இங்குள்ள ஆட்டோக்களில் பிரயாணம் செய்ய நினைத்து ஏறிவிட்டால், சமயத்தில் அரிச்சந்திரன் மாதிரி அத்தனையையும் அடகு வைக்கவேண்டிவந்துவிடும் போல் இருக்கிறது! அடேயப்பா! ஆட்டோ கட்டணமா, பகல் கொள்ளையா?**

வாசு : வாசல்ல போர்டு பார்த்திருப்பியே...

குமார் : ஆமா!... வி. சேகர் எம்.பி.பி. எஸ்ஸுன்னு போட்டிருக்கு. நான் வந்த சமயத்துல உன் பையன் வீட்டை விட்டு வெளியே போனதைப் பார்த்தேன்... அவனுக்கென்ன?

வாசு : அவனுக்கென்ன! டாக்டருக்குப் படிச்சு முடிச்சுட்டு நோயாளிகளைத் தேடிப் போகாம, ஹீரோயினைத் தேடிப் போறேங்கிறான்!...

குமார் : விளக்கமாச் சொல்லு...

வாசு : சினிமாவுல நடிக்கப் போறேன்னு சொல்றான்ப்பா.

குமார் : அப்படியா!

வாசு : ஆமா!... இப்பத்தான் ஒரு வாக்குவாதமே நடந்து முடிஞ்சு, கோபமா வெளியே போயிருக்காரு துரை!... இன்னிக்கு சமுதாயத்துல, விஞ்ஞானத்திலேயும் விவசாயத்துலேயும், மற்ற தொழில் துறைகளிலும் சாதனைபுரிய வேண்டிய இளைஞர்கள், இந்த வீணான சினிமா மோகத்துக்கு ஆட்பட்டு, தாங்களும் பாழாகி, தங்களுடைய குடும்பத்திலுள்ளவங்களோட நம்பிக்கையையும் பாழாக்கி... ஏன்!... இந்த நாட்டின் எதிர்காலத்தையே பாழாக்குறாங்கன்னுதான் நான் சொல்வேன்...

குமார் : ஆல்ரைட்... இந்த மூட்ல நான் எது சொன்னாலும் உனக்கு சரியாப் படாது!... நான் சாயங்காலமா மறுபடியும் வர்றேன்...!

வாசு : குமாரசாமி!... எத்தனையோ வருஷங்களுக்கப்புறம் இப்பத்தான் சந்திச்சிருக்கோம்... வீடு தேடி வந்த நண்பனை உபசரிக்காம ஏதேதோ பேசிட்டேன்... என்னை மன்னிச்சுடுப்பா!...

குமார் : நோ. நோ. அப்படியெல்லாம் சொல்லாதே! நமக்குள் எந்த ஃபார்மாலிட்டியும் வேண்டாம்... சாயங்காலம் வந்து சாவகாசமாப் பேசுவோம்... நான் வரட்டுமா!...

(செல்கிறார்)

## காட்சி - 2

**(வாசு வீடு)**

குமார் : வாசு... வாசு...

வாசு : வாப்பா குமாரசாமி! வா... வா...

குமார் : குமார்னு கூப்பிட்டா என்னா? குறைஞ்சா போயிடும்?

வாசு : சினிமா ரசிகர்களுக்கு நீ குமாராவேயிரு... ஆனா எனக்கு நீ என்னிக்குமே குமாரசாமிதான்.

குமார் : சரி... உன் இஷ்டப்படியே கூப்பிட்டுட்டுப் போ!... என்ன வாசு இன்னிக்கு ஷூட்டிங்குக்கு உங்க கிராமமே வந்திருந்துச்சு. வெரிஃபைன் லொகேஷன்... ஊர்ப் பெரியவங்களும் வந்திருந்தாங்க... நீ வந்திருக்கக் கூடாதா?

வாசு : நல்லாச் சொன்னே போ!... பையனுக படிக்கிற போது எதைச் செய்யக் கூடாதுன்னு நான் சொல்றேனோ அதை நானே செய்யலாமா?

குமார் : வாசு! நீ ஒரு வித்தியாசமான ஆள்தாம்பா!... இப்படியெல்லாம் சொந்த ஆசாபாசங்களைத் தியாகம் செஞ்சு வாழணும்னு சொல்லியே, இதுக்காக உங்களுக்கு அப்படி என்னதான் கிடைக்குது? மத்த தொழில்ல உள்ளவங்களைப் போலத்தானே நீங்களும் சம்பளம் வாங்குறீங்க...

வாசு : சம்பளத்துக்காக மட்டும் பார்க்கிற தொழில் இல்லேப்பா இது! 'எழுத்தறி

தயாரிப்பாளர் : இதை லோ-பட்ஜெட் படமா எடுக்கிறதா, பெரிய பட்ஜெட் படமா எடுக்கிறதான்னு புரியலே...

டைரக்டர் : சீக்கிரமா முடிவு பண்ணுங்க சார்... அதுக்குப் பிறகுதான் நான் ஆப்பிள் ஜூஸ் சாப்பிடலாமா, டீ சாப்பிடலாமான்னு முடிவு பண்ணணும்!''

- சீர்காழி வி. ரேவதி



வித்தவன் இறைவன்'னு கடவுளுக்குச் சமமா இந்த ஆசிரியர்களைச் சொல்லியிருக்காங்களே, இது வேற யாருக்குக் கிடைக்கும்? இந்தத் தனி கௌரவத்துக்காக நாங்க எந்தத் தியாகமும் செய்யலாம்.

குமார் : வாசு! இவ்வளவு உயர்வான உன்னைச் சினேகிதனா அடைஞ்சதுக்காக நான் ரொம்ப ரொம்பப் பெருமைப்படறேன்... ஆமா டாக்டர் எங்கே?

வாசு : மேலே இருக்காரு... காலையிலே உன்கிட்ட சாவகாசமாப் பேச முடியலை. இப்பச் சொல்லு... கல்யாணமாச்சா? எத்தனை குழந்தைங்க?

குமார் : ரெண்டு பொண்ணுங்க!

வாசு : பையன் இல்லையா?

(குமார் பெருமூச்சு விட, கண்களிலிருந்து கண்ணீர் வழிகிறது)

வாசு : குமாரசாமி! ஏன் திடீர்னு முகம் மாறிடுச்சு? அடடே என்னப்பா கண்ணீர் விடறே! என்ன சொல்லு...

குமார் : ஐயம் சாரி வாசு! மறந்து போயிருந்த என் ஒரே மகனோட ஞாபகம் வந்திருச்சு.

வாசு : என்னாச்சு உன் பையனுக்கு?

குமார் : அவன் இப்போது இல்லை.

வாசு : இறந்து போயிட்டானா? எப்படி?...

குமார் : பத்து நாள் படுக்கையில படுத்து, வைத்தியம் பண்ணி முடியாமப் போயி, அவன் போயிருந்தா, மனசு ஆறியிருக்கும். கண்ணுக்கெதிரிலேயே, கையிலிருந்த வைரத்தை தட்டிப் பறிச்சுட்டுப் போயிட்டான் அந்த ஆண்டவன்! அதுதான் என்னால தாங்க முடியலை வாசு... தாங்க முடியல.

(அழுகிறார்)

வாசு : நோ. நோ. மனசைத் தைரியப்படுத்திக்கோ... சரி சரி... இந்த காப்பியை முதல்ல குடி. ஆமா!... என்ன நடந்திச்சுன்னு சொல்லேன்...

குமார் : சொல்றேன் வாசு... சொல்றேன்... உன் பையன் வயசுதான் இருக்கும் என மகன் பாபுவுக்கு. படிப்புல ரொம்ப கெட்டிக்காரன்.. வாழ்க்கையில முன்னுக்கு வரணும், பெரிய பெரிய சாதனையெல்லாம் செய்யணும்ங்கிற ஆர்வம் நெறைஞ்ச பையன். அஞ்சு வருஷத்துக்கு முந்தி +2-ல் நல்ல மார்க் வாங்கினான்.

வாசு : அப்புறம்?

குமார் : அவனுக்கு டாக்டராகணும்னு ஒரே ஆசை! ஆனா அவனுக்கு சீட் கிடைக்கல.

வாசு : அடடா!...

குமார் : அந்த வேதனையில அடுத்த நாளே விஷத்தைக் குடிச்சுத் தன் கதையை முடிச்சுக்கிட்டான். எங்களையெல்லாம் அநாதையா விட்டுட்டுப் போயிட்டான் வாசு... போயிட்டான்...

(அழுகிறார்)

வாசு : அடடா!... குமாரசாமி! மனசைத் தளர விடாதேப்பா! நீயே இப்படி கலங்கினா உன் குடும்பத்திலுள்ள மத்தவங்க என்ன செய்வாங்க?

குமார் : விதியோட விளையாட்டைப் பார்த்தியா வாசு! இந்த சினிமா டைரக்டருக்கு மகனாப் பொறந்தவன் டாக்டராக ஆசைப்பட்டான். உன் வீட்டிலேயோ, டாக்டருக்குப் படிச்ச உன் மகன் சினிமா நடிகனாக ஆசைப்படறான்!

வாசு : என் பையனுக்குக் கிடைச்ச மெடிக்கல் ஸீட் உன் பையனுக்குக் கிடைச்சிருந்தா... ம்... பாவம்... உன் மகனை நீ இழந்திருக்க மாட்டே!

குமார் : அதான் வாசு... வாழ்க்கைப் பாதையில பயணத்தைத் தொடங்குறதுக்கு முந்தி, நல்லா யோசிச்சு, முடிவு செய்யணும். பாதி வழி போன பின்னால, அடுத்த பாதையில கவனத்தைச் செலுத்தினா பயணம் அரைகுறையாத்தான் போகும்...

வாசு : சரியாச் சொன்னே!... வா.. சாப்பிடப் போகலாம்!...

குமார் : அந்த விஷயத்துல இந்தக் குமாருக்கு எந்தக் குறையுமில்லே. உங்க ஊர்ப் பண்ணையார் வீட்டுல ஒரு பெரிய விருந்துக்கே ஏற்பாடு ஆகியிருக்கு. நான் போகலைன்னா ரொம்ப வருத்தப்படுவாங்க. நாளை சாப்பாட்டை உன் வீட்டிலேயே வச்சுக்

கிறேன்... தப்பா நெனைச்சுக்காதே. அதோட சேகரை என்னோட அடுத்த படத்துல ஹீரோவா போட்டுக்கறேன். ஒரு மேக்கப் டெஸ்ட் மட்டும் இருக்கு. பையனை நாளைக்குக் காலையிலே பண்ணையார் வீட்டுல என்னை வந்து பார்க்கச் சொல்லு... நான் வர்றேன்!

வாசு : நாளைக்கும் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லிடாதே!

குமார் : நிச்சயமா வர்றேன்...

(போகிறார்)

வாசு : சேகர்!... சேகர்!!...

சேகர் : (மாடியிலிருந்து) இதோ வந்துட்டேம்பா... (கீழே வந்து) ஏம்பா கூப்பிட்டீங்களா?...

வாசு : இந்த ஊருக்கு சினிமா ஷூட்டிங்குக்கு வந்திருக்காங்களே அந்தப் படத்தோட டைரக்டர் குமார்!... என்னோட பால்ய சிநேகிதன்... இப்போ வந்துட்டுப் போனான்... அவன்கிட்டே விஷயத்தைச் சொன்னேன். தன்னோட அடுத்த படத்துல உன்னை ஹீரோவா போடறதாச் சொல்லியிருக்கான். அது சம்பந்தமா ஏதோ மேக்கப் டெஸ்ட்டாம்... நாளைக்குக் காலையில உன்னை, பண்ணையார் வீட்டுல வந்து பாக்கச் சொல்லியிருக்கான்.

சேகர் : சாரிப்பா... நான் சினிமாவில நடிக்கப் போறதில்ல...

வாசு : சேகர் நீதான் சொல்றியா? நெஜமாத்தான் சொல்றியா?

சேகர் : நிச்சயமாச் சொல்றேன்... என் முடிவை நான் மாத்திக்கிட்டேன். என் பாதையை நான் தெளிவாப் புரிஞ்சுக்கிட்டேன். உங்க ஃப்ரண்டு டைரக்டர் குமார் சொன்னதை நானும் கேட்டுக்கிட்டுதான் இருந்தேன். நீங்க சொன்ன படியே அடுத்த வாரமே, இந்தக் கிராமத்துல அம்மா பேர்ல ஒரு கிளினிக் ஆரம்பிக்கப் போறேன்! மருத்துவத் துறையில என் முழு கவனத்தையும் செலுத்தி, ஒரு சிறந்த டாக்டரா மக்களுக்குச் சேவை செய்யப் போறேன்...

வாசு : (உணர்ச்சி பொங்க) சேகர்! என் வயித்துல பாலை வார்த்துட்டே... நான் கண்ட கனவு நனவாயிடுச்சு... ரொம்ப சந்தோஷம்ப்பா... சேகர்!...

## காட்சி - 3

(வாசு வீடு)

குமார் : வாசு!... வாசு!

வாசு : வாப்பா குமாரசாமி! வா... வா.. ஏன் லேட்டு?

குமார் : வாசு! லேட்டா வந்ததுக்கு நான் காரணமில்லே! மேக்கப் டெஸ்டுக்கு உன் பையனை வரச் சொல்லியிருந்தேன். இது வரையிலும் காத்திருந்தேன்... காணோம்...

வாசு : இனி அதுக்கு அவசியமில்லப்பா...

குமார் : என்ன சொல்றே?

வாசு : என் பையன் முடிவை மாத்திக்கிட்டான். டாக்டரா பிராக்டீஸ் பண்ணப் போறான்.

குமார் : அப்படியா! இப்போ டாக்டர் சேகர் வீட்ல இருக்காரா?

வாசு : இல்லை.. வெளியே போயிருக்கான்...

குமார் : இந்த திடீர் மாற்றத்துக்குக் காரணம்?

வாசு : ஒருத்தரோட சோகம், இன்னொருத்தருக்கு யோகமா முடிஞ்சது.

குமார் : வாசு! என்ன சொல்றே?

வாசு : நேத்து உன் பையன் இறந்ததையும், அதுக்கான காரணத்தையும் நீ சொன்னப்போ, மாடியில இருந்து என் பையனும் கேட்டுக்கிட்டு இருந்திருக்கான். அந்த துயரச் சம்பவம்தான் என் பையனோட முடிவை மாத்திடுச்சு!

(இதைக் கேட்டதும் குமார் வாய் விட்டுச் சிரிக்கிறார்)

வாசு : என்னப்பா! குமாரசாமி... ஏன் சிரிக்கறே?

குமார் : சக்ஸஸ்... சக்ஸஸ்... இந்த டைரக்டர் குமாரோட கற்பனைக்குக் கிடைத்த மகத்தான வெற்றி! (சிரிக்கிறார்)

வாசு : என்னது! கற்பனையா?

குமார் : கற்பனையேதான். சரியான திசைக்கு உன் பையனைக் கொண்டு வர நானே தயாரிச்சு நடிச்ச அவசர நாடகம். நேத்து நான் சொன்னதெல்லாம் வெறும் கற்பனை வாசு! என்னைப் பாத்த உடனேயே சினிமாவைச் சாடுனியே! தப்பு சினிமாவுலே இல்லப்பா!... அந்த சினிமாவைக் கையாளுற முறையில்தான்! என்னைப் போல சில டைரக்டர்கள், மக்கள் ரசனை, அது, இதுன்னு சாக்குப் போக்குச் சொல்லாம, மூளைய வருத்தி இந்தச் சமுதாயத்திற்குப் பயன்படுற மாதிரி நல்ல படங்களை எடுக்கத்தான் செய்யறோம்.

வாசு : குமாரசாமி!... இல்லை... இல்லை.. டைரக்டர் குமார்! ஆமாண்டா! இனிமே என் வாய் நிறைய உன்னை டைரக்டர் குமார்னுதான் கூப்பிடுவேன். நீ இப்போ செஞ்சிருக்கிற உதவிக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போறேன்... சினிமாவைப் பத்தின தப்புக் கணக்கு, என் மனசில இருந்து இன்னியோட போயிடுச்சு. உன்னைப் போல உயர்ந்த நோக்கமுள்ள சினிமா டைரக்டர்களெல்லாம் வளரணும்.. வாழணும்... அது மூலமா இந்தச் சமுதாயம் வாழணும்...

(திரை)

# வாஷிங்டன் வைரம்

## 21

இரண்டு டாக்சிகளும் 'மெட்ரோ சென்டர்' வரை விரைந்தன. ரகுராமன் குழுவினர் இறங்குவதைப் பார்த்த ஆள் தானும் பின்னாலிருந்த டாக்சியிலிருந்து இறங்கிப் பணம் கொடுக்கப் போனான். அதற்குள் முன் நின்றிருந்த டாக்சி நகர ஆரம்பித்தது.

அப்போதுதான் நிர்மலா கீழே இறங்காததை அந்த ஆள் கவனித்தான். பணத்தைப் பையில் போட்டுக் கொண்டு மீண்டும் நிர்மலா ஏறியிருந்த டாக்சியைத் தொடருமாறு உத்தரவிட்டான்.

நிர்மலாவின் டாக்சி வேறு எங்கும் நிற்காமல் நேராக அவளுடைய அபார்ட்மெண்ட் இருந்த பகுதியில் வந்து நின்றதும் அந்த ஆள் பெருமூச்சு விட்டான். நிர்மலா எங்கெங்கு தன்னை அலைக்கழிக்கப் போகிறாளோ என்று நினைத்திருந்தவனுக்கு இது வியப்பளித்தது.

நிர்மலா உள்ளே சென்று மறைந்ததும் அந்த ஆள் இறங்கிக் கொண்டு பணத்தைக் கொடுத்து டாக்சியை அனுப்பினான். நிம்மதியாக ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தான்.

அந்த ஆளை இறக்கிவிட்டுப் புறப்பட்ட டாக்சியை ஓட்டியவன் ஸாம். ரகுராமன் குழுவினர் இறங்கியதை அவனும் கவனித்தான். ரகுராமனுடன் வந்த பெண்ணை இந்த ஆள் ஏன் பின் தொடர வேண்டும்? இதில் நிச்சயம் ஏதோ பிரச்னை இருக்கிறது என்பதை உடனே தீர்மானித்தான்.

டி.சி. போலீசுக்குச் சொல்லலாம் என்று நினைத்தவன் சட்டென்று மனத்தை மாற்றிக் கொண்டான்.

'நம்ம ராபர்ட் வார்னர் எஃப்.பி.ஐ. இருக்கிறானே அதைவிடவா உள்ளூர் போலீசு' என்று நினைத்த ஸாம் ராபர்ட்டுக்குப் போன் செய்ய விரைந்தான்.

'ஸ்மித்ஸோனியன்' நிறுவனத்தில் வெடிகுண்டால் பாதிக்கப்பட்ட பகுதியைப் பழுதுபார்க்கும் வேலையை ஆரம்பிக்க எண்ணினார்கள். இன்னும் சில நாட்களில் 'நேச்சுரல் ஹிஸ்டரி' மியூசியத்தின் இரண்டாம் மாடியின் கிழக்குப் பகுதி மூடப்படும். அங்கு இருந்த விலையுயர்ந்த கற்களையும், தங்க, வைர நகைகளையும் பத்திரப்படுத்த ஏற்பாடுகள் நடந்தன. அதிகாரியான மைக்கேல் விண்டன் முழுப் பொறுப்பையும் ஏற்றிருந்தார். அவருக்கு உதவியாக டேவிட் பாமர் வேலை செய்தார்.



ஏற்கெனவே கோடிக்கணக்கான டாலர் மதிப்புள்ள பல பொருள்களை வேறொரு மியூசியத்துக்கு மாற்றி பலமான காவலையும் வைத்தார்கள். எஃப்.பி.ஐ. ஏஜண்ட் ராபர்ட் வார்னருடன் கலந்து யோசனை செய்துதான் நிறைய காரியங்களைச் செய்தார்கள். ஆனால் ஒரே ஒரு விஷயத்தை மைக்கேல் விண்டனும், டேவிட் பாமரும் யாருடனும் கலக்காமலே செயல் படுத்த விரும்பினர்.

ஒரு நாள் மாலை 'நேச்சுரல் ஹிஸ்டரி' மியூசியத்தின் வாசல் கதவுகள் மூடப்பட்ட பின் டேவிட் பாமரும், மைக்கேல் விண்டனும் இரண்டாம் மாடிப் பகுதிக்குப்

ராசன்

போனார்கள். மியூசியத்தினுள் எப்போதும் காவலர்கள் இருந்தனர். அன்று மாலையும் வழக்கம்போல் இரண்டாம் மாடியிலும் காவலர்களில் ஒருவனாக ரிச்சர்ட் மூர் நின்றிருந்தான். அதிகாரிகள் இரண்டு பேர் வருவதைக் கவனித்தவன் உஷாரானான்.

''ரிச்சர்ட், எனக்கும் மிஸ்டர் விண்டனுக்கும் உள்ளே கொஞ்சம் வேலை இருக்கிறது. இப்போது யாரையும் உள்ளே அனுப்பாதே'' என்று டேவிட் சொன்னார்.

''அப்படியே ஆகட்டும்'' என்று ரிச்சர்ட் சொல்லிவிட்டு அவர்களுக்குக் கதவைத் திறந்தான்.

உள்ளே டேவிட், மைக்கேல் இருவரும் நுழைந்ததும் ரிச்சர்ட் அறைக் கதவைச் சாத்திவிட்டு வெளியே காவலுக்கு நின்றான். அவன் கைக்கடிகாரம் ஆறு எனக் காட்டியது.

நேராக 'ஹோப்' வைரம் இருந்த இடத்துக்குப் போனார்கள் அதிகாரிகள்.

''மைக்கேல்... இந்த 'ஹோப்' வைரம் நம்முடைய மியூசியத்துக்கு எந்தக் கெடுதலையும் உண்டாக்காதே?'' என்றார் டேவிட்.

''டேவிட்.... நீ இப்படி மூட நம்பிக்கையுடையவன் என்பதை இன்னிக்கித்தான் தெரிஞ்சுக்கிட்டேன்.'' மைக்கேல் சிரித்து விட்டார்.

''இங்கே பார் டேவிட்... இந்த விலை மதிக்க முடியாத 'ஹோப்' வைரம்பற்றிய கதைகள் எனக்குத் தெரியும். ஆனா.... இது இங்கே முப்பது ஆண்டுகளுக்கு மேலே இருக்கு.... இதுவரை எந்தக் கெடுதலும் நடக்கவில்லை... இனியும் நடக்காது என்று நிச்சயம் நம்புகிறேன்'' என்று திடமாகச் சொன்னார் மைக்கேல் விண்டன்.

அவர்கள் பேச்சைக் கேட்டுச் சிரிப்பதைப் போல் அந்த நீல வைரக்கல் ஒளியைச் சிந்தியது. அதைச் சுற்றி மாலையில் பொதித்திருந்த வைரக்கற்கள் கண் சிமிட்டின.

டேவிட்டும், மைக்கேலும் அதைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தனர். தாங்கள் செய்ய வேண்டிய ஏற்பாடுகள் பற்றி ஒரு முறை விரிவாகப் பேசினார்கள்.

இருவரும் அறையை விட்டு வெளியேறியபோது மணி ஆறு நாற்பதாகியிருந்தது. ரிச்சர்ட் அவ்வளவு நேரம் பொறுமையாக நின்றிருந்தாலும் அவனுடைய இதயம் வேகமாக அடித்துக் கொண்டிருந்தது.

மைக்கேலும் டேவிடும் கீழ்த்தளத்துக்கு இறங்க ஆரம்பித்தனர். அவர்கள் கண்பார்வையிலிருந்து மறைந்ததும் ரிச்சர்ட் மூர் 'ஹோப்' வைரம் இருந்த அறைப்பக்கம் ஓடினான். அங்கே அவன் தினமும் மறைவாக வைத்துக் காத்திருந்த 'டேப் ரிகார்டர்' இருக்கிறதா என்று பார்த்தான். இருந்தது! வெளியே எடுத்தான். அது நின்றுவிட்டிருந்தது. ஏன் இன்னும் ஓடிக் கொண்டிருக்கவில்லை? 'டேப்'பை பின்திசையில் ஓட்டினான். பிறகு அதில் பதிந்திருக்கும் டேவிட்-மைக்கேல் பேச்சைக் கேட்க ஆவலுடன் தட்டினான்.

'டேப்' சுழன்று கொண்டிருந்தது. அதில் எந்தப் பேச்சும் பதிவானதாய்த் தெரியவில்லை. ரிச்சர்ட் மூர் தலையில்



நாலு முறை அடித்துக் கொண்டான். கடைசியில் தன் திட்டம் இப்படி முறிந்தது பற்றிப் பலமுறை தன்னையே திட்டிக் கொண்டான். சட்டென்று ஒரு யோசனை உதித்தது. வேகமாக அறையை விட்டு ஓடி, கீழ்த் தளத்தை அடைந்தான்.

நினைத்தது சரிதான். மைக்கேலும் டேவிடும் இன்னமும் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பார்வைக்குப் படாமல் ரிச்சர்ட் கீழே இறங்கி, அவர்கள் பேச்சு காதில் விழும் கிட்டத்தில் மறைந்து நின்று கொண்டான்.

'நல்ல நேரத்தில் வந்தோமே' என்று கொஞ்சம் திருப்திப்பட்ட ரிச்சர்டுக்கு அவர்கள் பேசியது துல்லியமாய்க் காதில் விழுந்தது.

பத்து நிமிடங்களில் மைக்கேல் புறப் பட்டார். டேவிட், ''நான் ஒரு 'ரவுண்டு' பார்த்துவிட்டுப் புறப்படுவேன்.... நாளைக் குப் பார்க்கலாம்'' என்று சொல்லிவிட்டு, ரிச்சர்ட் இருந்த திசைக்கு - எதிர்ப்புறமாய்ப் போனார்.

ரிச்சர்ட் மீண்டும் மேலே போய், 'டேப் ரிக்கார்டரை' எடுத்துக் கொண்டான். அந்த 'ஹோப்' வைரத்தை ஒரு முறை பார்த்தான். அவன் உடல் ஒரு முறை சிலிர்த்தது. தொண்டையை அடைத்துக் கொண்டது போல பிரமை ஏற்பட்டது.

அறையைவிட்டு வெளியேறினான். வழியாய் விரைந்தான். பின்னால் ஒரு முறை திரும்பிப் பார்த்தான். யாரும் பின் தொடரவில்லை. மாடிசன் அவென்யூவில் மேற்கே கொஞ்சம் போய் வலது புறம் திரும்பி 12 வது தெருவில் போனான். அந்தத் தெருவில் அவன் மறைந்ததும், மாடிசன் அவென்யூவில் கிழக்கே தூரத்தில் இருந்த கார் ஒன்று அவனைப் பின் தொடர்ந்தது. ரிச்சர்ட் திரும்பாமல் நடந்து கான்ஸ்டிடியூஷன் அவென்யூ சந்திக்குமிடத் தில் இடதுபுறம் திரும்பினான். பழைய போஸ்ட் ஆபீஸ் கட்டடத்தை அடைந்த போது அங்கு மக்கள் நடமாட்டம் குறைந்



ஒன்பது மணிக்கு வேலை முடிந்ததும் வைர மூர்த்திக்கு விவரத்தைச் சொல்ல வேண் டும். அவர் காத்திருக்கும் 'ஹோப்' வைரம் பற்றிய செய்தி மிக முக்கியமானது. 'அவர் எனக்கு ஐம்பதாயிரம் டாலர் தந்தால்தான் நான் இதைச் சொல்வேன்' என்று தீர்மா னித்தான். 'ரிச்சர்ட், நீ பயங்கர புத்திசாலி' என்று தன்னைத் தானே புகழ்ந்து கொண்டான். அவன் முகம் மகிழ்ச்சியைக் காட்டியது.

## 22

இரவு மணி ஒன்பது. ரிச்சர்ட் மூர் மியூசியத்தைவிட்டு வெளியே வந்ததும் ஓட்டமும் நடையுமாய் மாடிசன் அவென்யூ

இருந்தது. கான்ஸ்டிடியூஷன் அவென்யூ வில் அவன் இருந்ததற்கு எதிர்ப்புறமாக வந்து அவனைப் பின் தொடர்ந்த கார் ஓரிடத்தில் நின்றது. அதிலிருந்து இறங்கிய டேவிட் விரைந்து சாலையைக் கடந்து ரிச்சர்டின் பார்வைக்குத் தெரியாமல் வந்து நின்று கொண்டார்.

தொலை பேசிக் கூண்டுக்குள் நுழைந்த ரிச்சர்ட் வைரமூர்த்தியின் வீட்டு எண்ணைச் சுழற்றினான். வாஷிங்டனில் இருந்த தொலைபேசிக் கூண்டுகளுக்குக் கதவு இல்லை. ஒரு ஆள் உள்ளே நுழைந்து நிற் கும் அளவு வளைவான அமைப்பு அது. ரிச்சர்டின் முதுகுப் புறத்தில் இருந்த டேவிட் பாமருக்கு ரிச்சர்ட் பேசுவது அரை



"இந்த மெட்ராஸ்-ஐ இப்படி நம்பிக்கைத் துரோகம் பண்ணும்னு நான் எதிர்பார்க்கவேயில்லை!"

"ஏன்... என்னாச்சு?"

"அது வரும்னு நம்பி கூலிங் கிளாஸெல்லாம் வாங்கி வெச்சிருக்கேன். சனியன்... வராமலேயே போயிட்டுது!"

வேதபுரி எஸ். ரமேஷ்

குறையாகக் காதில் விழுந்தது. ஏதோ ஐம்பதாயிரம் டாலர் என்று அவன் குரலை உயர்த்தியதும் டேவிட் பாமர் நன்றாகக் கேட்க முடிந்தது. வைரமூர்த்தியின் பெயரை மூன்று முறை ரிச்சர்ட் உரத்த குரலில் சொன்னான்.

கடைசியில் ஏதோ முப்பதாயிரம் என்று ரிச்சர்ட் பேசி முடித்ததும் போனை வைத்தான். மீண்டும் 12 ம் தெருவுக்குப் போய் 'மெட்ரோ சென்டரை' நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

அவன் தன்னைப் பார்க்கவில்லை, இனி பார்க்க முடியாது என்று உறுதிப் படுத்திக் கொண்ட டேவிட் பாமர், ரிச்சர்ட் போன் செய்த இடத்துக்கருகிலிருந்த பெரிய குப்பைத் தொட்டியின் பின்புறத்திலிருந்து வெளிப்பட்டார்.

'மைக்கேலும் நானும் நினைத்தது சரிதான். ஏஜண்ட் ராபர்ட் வார்னர் சொன்னதும் சரிதான்' என்று நினைத்தவர், ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவராகக் காரை நோக்கி நடந்தார்.

காரில் நேராக கான்ஸ்டிடியூஷன் அவென்யூ போய் இரண்டு மூன்று வீதிகளில் திரும்பி, எஃப்.பி.ஐ. கட்டடத்தை அடைந்தார். அங்கு ஓரிடத்தில் காரை நிறுத்திவிட்டு உள்ளே போனார்.

ஒன்பது மணி தாண்டியும் ராபர்ட் வார்னர் வேலை மும்முரத்திலிருந்தான். அவரை அந்த நேரத்தில் அங்கே அவன் எதிர்பார்க்கவேயில்லை என்பதை ராபர்ட்டின் முகம் காட்டியது.

ராபர்ட் தருவதாய்ச் சொன்ன காப்பியை வேண்டாம் என்று சொல்லிவிட்டு, 'ஹோப்' வைரம் பற்றி டேவிட் பாமர் பேசத் தொடங்கினார்.

ராபர்ட் கவனமாகக் கேட்டான். டேவிட் பாமர் இப்போதாவது தங்களுடைய திட்டங்களைச் சொல்கிறாரே என்று திருப்திப்பட்டான்.

மறுநாள் காலை. ரகுராமன் யூனிவர்சிட்டிக்குப் போன அரைமணி நேரத்தில் வைத்தியநாதன், பூர்ணம் இருவரும் காலாற நடந்து வரப் போயிருந்தார்கள்.

அதுதான் நல்ல சமயம் என்று நல்லதம்பி வைரமூர்த்திக்கு போன் செய்தார்.

"நான் சொன்னபடி வைத்தியநாதனை மடக்கினியா?" என்றார் வைரமூர்த்தி.

"இல்லை."

"நீ இப்ப அதைச் செய்தே ஆகணும்... எனக்கு மியூசியத்திலிருந்து தகவல் வந்தாச்சு... நமக்கு இன்னும் சில நாட்கள்தான் இருக்கு.... நான் சாயங்காலம் உங்கிட்டே மறுபடி பேசணும். அதுக்குள்ள வைத்தியநாதனை நீ சரிக்கட்டணும்... என்னைச் சரியா நாலு மணிக்கு வீட்டுல கூப்பிடு."

சற்று நேரத்தில் உள்ளே நுழைந்த வைத்தியநாதனும் பூர்ணமும் அங்கே வேகமாகக் குறுக்கும் நெடுக்கும் உலாவிக் கொண்டிருந்த நல்லதம்பியைப் பார்த்தார்கள். அவர் முகம் கோபக் களைலைக் கக்கியது.

"இரண்டு பேரும் இப்படி உட்காருங்க." கடுமையாகவே சொன்னார் நல்லதம்பி.

பூர்ணம் நடு நடுங்கி விட்டாள். 'தமிழ்ப்படங்களிலே வருகிற வில்லன் மாதிரி நல்லதம்பி திடீர்னு மாறி இருக்காரே. இப்ப என்னை செய்யறது?' என்று ஒரு பக்கமாக ஒடுங்கி உட்கார்ந்தாள்.

வைத்தியநாதனும் உட்கார்ந்தார்.

"மிஸ்டர் வைத்தி..... நான் உங்ககிட்ட இது வரை பல தடவை சொன்ன விஷயத்தை முடிவு செய்யற நேரம் வந்துவிட்டது."

"இதுவரை பதில் சொல்லாமலிருந்ததை வெச்சே என் பதிலை நீங்க புரிஞ்சிக்கிட்டு இருக்கலாமே."

"என் பொறுமையைச் சோதிக்கிறீங்க. இத்தனை நாளா நான் சொல்ல வேண்டாம்னு இருந்ததை இப்பச் சொல்ல வைக்கறீங்க...." என்று மிகக் கடுமையான குரலில் சொன்னார் நல்லதம்பி.

"அப்படி என்னய்யா சொல்லிடுவீங்க?" சவால் விட்டார் வைத்தியநாதன்.

"உங்களுக்கு 1969 ஆம் வருஷம் ஜூன் மாதம் பதினெட்டாம் நாள் நடந்த சம்பவம் நினைவில்லையா?"

"அடப்பாவி, அதைப்பத்திச் சொல்லாதே!" என்று வீரிட்டுக் கத்தினாள் பூர்ணம். அவளை ஒரு கையால் அணைத்துக் கொண்டார் வைத்திநாதன்.

"உண்மையிலேயே நீ ஒரு மிருகம்னு நான் இப்ப புரிஞ்சுகிட்டேன்" முதல் முறையாக வைத்தியநாதன் கத்தினார்.

(தொடரும்)

# வட்டி விகிதம் உயர்கிறது; விலைவாசியும் ஏறுகிறது!

சமீபத்தில் மத்திய அரசு வட்டி விகிதங்களை அதிகரித்து அறிவிப்புச் செய்ததிலிருந்து, பல பெரிய நிறுவனங்கள் தாங்கள் வழங்கவிருக்கும் டிபன்சர் கடன் பத்திரங்களுக்கு 17 சதம் வட்டி தரத் தீர்மானித்துள்ளன. இரண்டு நிறுவனங்கள் ஏற்கெனவே தங்கள் திட்டத்தை வெளியிட்டும் உள்ளன. அவை,

ஸவுத் இண்டியா விஸ்கோஸ்
ரிலையன்ஸ் இண்டஸ்டிரி

ஆகியன. இரண்டும் நன்கு வேரூன்றியுள்ள நிறுவனங்கள். இவர்கள் முன்னோடியாக விளங்க, வேறு பல நிறுவனங்களும் 17 சதம் வட்டிக்கு டிபன்சர்கள் வழங்குவதாகக் கூறிக் கொண்டு மார்க்கெட்டுக்கு வரும் என்று கருதப்படுகிறது. உபரிநிதி உள்ள மக்கள் இந்த டிபன்சர்களில் முதலீடு செய்வது பற்றி யோசிக்கலாம்.

இது ஒருபுறமிருக்க, 'திடும்மென்று வட்டி விகிதம் உயர்வானேன்? உயர, அரசு அனுமதிப்பானேன்?' என்ற கேள்விகள் எழுகின்றன. பல்வேறு வங்கிகள், நிதி நிறுவனங்களின் வட்டி விகிதங்களை மத்திய அரசும் ரிஸர்வ் வங்கியும் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருக்கின்றன. தவிர, அரசாங்கமே தனது அபிவிருத்திப் பணிகளுக்காக மக்களிடம் கடன் வாங்குகிறது. இவற்றை 'அரசுக் கடன் பத்திரங்கள்' என்கிறோம். இவ்வாறு இன்று வரை மத்திய, மாநில அரசுகள் கடன் வாங்கியுள்ள மொத்த தொகை 1,80,000 கோடி! நோக்கம் என்னவெனில், இந்தக் கடனை அபிவிருத்திப் பணிகளில் ஈடுபடுத்தி, பொருளாதாரத்தை மேம்பாடடையச் செய்தால், கடனை வட்டியுடன் மக்களுக்கு எளிதில் திருப்பித் தந்து விடலாம் என்பது. நீர்ப்பாசனம், அணை கட்டுதல், சாலை அமைத்தல், மின் உற்பத்தி போன்றவை இதில் அடங்கும். இவ்வாறு ஆண்டுதோறும் மத்திய மாநில அரசுகள் சுமார் 10,000 கோடி வரை மக்களிடம் கடன் வாங்குகின்றன. ஆனால் சிக்கல் என்னவெனில், பொருளாதாரம் எதிர்பார்த்த வேகத்தில் வளர்ச்சி அடையாததால், அரசாங்கங்கள் இப்போது பெறும் கடன்களில் பெரும் பகுதி, கடந்த காலக் கடன்களைத் திருப்பித் தரவும் வட்டி தரவுமே சரியாய்ப் போய் விடுகிறது! அபிவிருத்தித் திட்டங்களுக்கு இந்தக் கடன்களில் சிறு பகுதியே மிஞ்சுகிறது!

எனவே அரசு, மக்களிடம் சேமிப்பு உணர்வை ஊக்குவித்து, சேமிப்பை மேலும் பெருகச் செய்ய வேண்டியிருக்கிறது. பல்வேறு அரசு, தனியார் நிறுவனங்களின் அனாவசியச் செலவினங்களைக் கட்டுப்படுத்தவும் கோரிக்கை விடுக்கிறது.

விலைவாசி உயர ஒரு காரணம், உற்பத்தியாகும் பொருள்கள் குறைவாகவும் பணப் புழக்கம் அதிகமாகவும் இருப்பதுதான். ஆதலால், பணப் புழக்கத்தைக் கட்டுப்படுத்தி, அந்தப் பணத்தைச் சேமிப்பாக மாற்ற அரசு எண்ணுகிறது. மக்கள் சேமிக்க வேண்டுமென்றால் வட்டி விகிதம் கவர்ச்சிகரமாக அமைய வேண்டும். இதனால்தான் தற்போது அரசு வட்டி விகிதங்களை அதிகரித்துள்ளது. 15-20 ஆண்டுகளுக்கு முன் அரசு கடன் பத்திரங்கள் 6 அல்லது 7 சதம் வட்டிதான் அளித்தன. இது படிப்படியாக உயர்ந்து, தற்போது 12 சதம் அறிவித்துள்ளது அரசு!

இதையொட்டி வங்கியில் டெபாஸிட் செய்யப்படும் வைப்பு நிதிக்கும் வட்டி விகிதம் உயர்த்தப்பட்டுள்ளது. தனியார் துறையில் நடக்கும் நிதி நிறுவனங்களும் 14 லிருந்து 15 சதமாக வட்டியை உயர்த்த அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

இதனாலெல்லாம் உடனடியாகப் பணவீக்கம் குறைந்து விடும் என்று எதிர்பார்க்க முடியாது. ஒருவேளை நீண்ட கால நோக்கில் சாத்தியமாகலாம். ஆனால் உடனடி விளைவு என்ன என்று பார்த்தால், சேமிப்பு செய்யும் மக்களுக்குக் கூடுதல் வட்டி தரும் வங்கிகள், தொழில் துறைக்கு வழங்கும் கடனின் வட்டி விகிதத்தையும் அதிகரிக்கின்றன. இதனால் உற்பத்திச் செலவு கூடுதலாக, பண்டங்களின் விலை மேலும் உயரவே உடனடி வாய்ப்பு! ஆக அரசின் நோக்கம் நிறைவேறுமா? சந்தேகம்தான்.

– வி. கோபாலன்



5

அந்தச் சிரிப்பும் பளிச்சென்ற அந்த முகமும் இவன் ரொம்ப நல்லவன் என்ற அபிப்பிராயத்தை ஏற்படுத்தின. தினம் தினம் அவள் சந்திக்கும் மனிதர்களிட மிருந்து அவன் எந்த வகையிலோ வித்தியாசமாகத் தெரிந்தான்.

''எந்தக் கிளாசிலே படிக்கிறீங்க?'' என்றான் புன்னகை மாறாமல்.

''பன்னிரெண்டாவது. ப்ளீஸ், வாங்க போங்கன்னு கூப்பிட வேண்டாம்.''

''ஓ.கே.'' என்று அவன் சிரித்தான்.

''என்னையும் வா, போன்னுதான் சொல்லணும்.''

'ஓ.கே.' என்றபடி அவனை அவள் ஆராய்ந்தாள். அவளை விட ஐந்து ஆறு வயது பெரியவனாக இருப்பான். அவன் பேசும் போது தவழ்ந்த புன்னகையும் முகத்தில் காட்டிய மரியாதையோ, ஆர்வமோ

''வானவில் பார்த்திருக்கியா?''

அவள் விழித்தாள். அது என்ன வார்த்தை என்று தெரியவில்லை. ஆரோவில் மாதிரி தொனித்தது.

''வானவில்னா?''

''நீ என்ன இங்கிலீஷ்காரியா?''

''இல்லே அமெரிக்கன்!''

''அப்படின்னா உனக்குப் புரியாது.''

''எது புரியாது?'

''தத்துவம்!''

அவளுக்குச் சிரிப்பு வந்தது.

''தத்துவம் புரியாட்டாப் போறது. வானவில்னா என்ன?''

அவன் தனது வரிசைப் பற்களைக் காட்டிச் சிரித்தான்.

''வானவில்லேதான் தத்துவமே இருக்கு.''

''போர் அடிக்காதே!'' என்றாள் அவள் பொறுமையில்லாமல். ''நீ சொல்லாட்டா மேம்கிட்டக் கேட்டுக்கறேன்.''

# காதலெனும் வானவில்



நூதனமாகத் தோன்றின.

''என்ன சப்ஜெக்ட் எடுத்துக்கிட்டிருக்கே?''

''பயாலஜி. டாக்டருக்குப் படிக்கணும்னு ஆசை.''

''குட்!'' அவன் அவளை ஆசீர்வதிப்பது போல் புன்னகை செய்தான்.

''நீ?'' என்றாள் அவள் ஆர்வத்துடன். ''படிக்கிறியா, வேலை பார்க்கிறியா?''

''படிக்கிறேன்'' என்றான் அதே புன்னகையுடன்.

''என்ன சப்ஜெக்ட்?''

''தத்துவம். ஃபிலாஸபி.''

''ஃபிலாஸபியா?'' என்று அவள் வியப்புடன் சிரித்தாள்.

''என்ன செய்யப் போறே?''

''டீச்சராப் போவேன். புத்தகங்கள் எழுதுவேன். ஏன், தத்துவம் நல்ல சப்ஜெக்டா உனக்குத் தோணலியா?''

''அதெல்லாம் இல்லே!'' என்று அவள் சிரித்தாள். தத்துவம்னா வயசானவங்க படிக்கிறதுன்னு எனக்கு எண்ணம்.''

''நானும் வயசானவன், பிறக்கும் போதே.''

அது ஏதோ ஹாஸ்யம் போல் அவன் சிரித்தான். அவன் ஏன் சிரிக்கிறான் என்று புரியாமல் அவள் லேசான புன்னகையுடன் அமர்ந்திருந்தாள்.

''நீ தெரிஞ்சுக்கணும் என்கிற அவசியமில்லே'' என்றான் அவன் மீண்டும் பரிகாசமாக. ''நீ டாக்டராப் போகப் போறே. அமெரிக்காவிலே போய் தொழில் நடத்தினாலும் நடத்துவே. உனக்கெல்லாம் வானவில்லைப் பார்க்க எப்படியும் அவகாசம் இருக்காது!''

மைதிலி ஜெயராமன் தேநீர்க் கோப்பைகள் கொண்ட டிரேயை ஏந்தியபடி வருவதைக் கண்டு, மீரா சட்டென்று எழுந்து விரைந்து அவளிடமிருந்து டிரேயை வாங்கிக் கொண்டாள்.

''வானவில்னா என்ன மேம்?'' என்றாள் ரகசியக் குரலில்.

''சொல்லாதேம்மா!'' என்றான் ஹரி பலக்க.

''சரி வேண்டாம், யாரும் சொல்ல வேண்டாம்'' என்றாள் மீரா பொய்க் கோபத்துடன். ''நானே தெரிஞ்சுக்கறேன்.''

''ஆ, அதுதான் நல்லது. நான் கூட நிறைய விஷயங்களை நானாத்தான் கத்துக்கிட்டேன்.''

வாஸந்தி

ஹரி வாய் விட்டுச் சிரித்தாள். மைதிலி ஏதும் சொல்லாமல் புன்னகையுடன் அவளிடம் டீயையும் பிஸ்கெட்டையும் நீட்டினாள்.

''ஹரி உனக்கு டீ வேணுமா?''

''வேணும்.''

மைதிலி அவள் பக்கமாகக் கோப்பையை நகர்த்தி, ''வெச்சிருக்கேன், எடுத்துக்கோ'' என்றாள்.

அவள் டீயை எடுத்துக் கொள்ளாமல் ''வானவில்னா ரெயின்போன்னு அர்த்தம்!'' என்றாள் நிதானமாக.

''ஓ!'' என்று அவள் கூச்சத்துடன் மைதிலியைப் பார்த்துச் சிரித்தாள்.

''அதைப் பத்தி என்ன இப்போ?'' என்றாள் மைதிலி.

ஹரி சிரித்துக் கொண்டே பேசினாள். ''ஃபிலாஸபியெல்லாம் ஒரு பாடமான்னு மீரா கேட்டா!''

''ஐய்யோ பொய்'' என்ற மீராவை லட்சியம் செய்யாமல் தொடர்ந்தாள். ''தத்துவம் இல்லாத விஷயமே இல்லேன்னேன்.''

''பெரிய தத்துவம்!'' என்றாள் மீரா ரோசத்துடன். ''எனக்கு ஒண்ணும் தெரியல்லே.''

''இவளுக்கு எல்லாம் புட்டுப் புட்டுச்





# அரசியல்வாதிக்கு இட ஒதுக்கீடு

மதுரை மாநகராட்சிக்கென்று ஒரு ஸ்பெஷல் அளவுகோல் இருக்கிறது. அதன்படி மதுரை நகருக்குள் வைக்கப் படும் சினிமாக்காரர்களின் கட்-அவுட்கள் இருபதடி உயரத்திற்குமேல் இருக்கக் கூடாது. அதற்குமேல் வைத்தால் கடுமையான நடவடிக்கை தான். ஆனால், இதெல்லாம் அரசியல் வாதிகளின் கட்-அவுட்களுக்குக் கிடை யாது. ஆமாம்; அரசியல்வாதி களுக்கு* மட்டும் சிறப்பு இட ஒதுக்கீடு!

சொன்னாத்தான் புரியும் போலிருக்கு. ரெயின்போவிலே எத்தனை நிறம் இருக்கு?''

''ஏழு.''

''அப்படின்னு நீ சொல்றே. எனக்கு ஒரே ஒரு நிறம்தான் தெரிகிறது.''

''அதைப் பார்க்காம கண்ணை மூடிக் கிட்டா அப்படித்தான் தெரியும்!''

அவன் சிரித்தான்.

''எக்ஸாக்ட்லி. உண்மையிலே அங்கே இருக்கிறது ஒண்ணுதான். ஏழு இருக்கிறதா நாம நினைக்கிறது ஒரு பாவனை. நீ அமெரிக்கன், நா இந்தியன் இன்னொருத் தன் நீக்ரோன்னு மனுஷ ஜாதியைப் பிரிச்சுப் பார்க்கிற மாதிரி - ஹிந்து, கிருஸ்துவன், முஸ்லிம்னு பிரிச்சுச் சொல்ற மாதிரி - அடிப்படையிலே இருக்கிற விஷயம் ஒண்ணுதான்.''

மீரா வியப்புடன் அவனைப் பார்த் தாள். இவன் மைதிலியின் தாத்தாவாக இருக்க வேண்டும் என்று தோன்றிற்று. மைதிலி மீராவைப் பார்த்துச் சிரித்தாள்.

''மீரா நாளைக்கு உன் விவாதத்துக்கு இந்தப் பாயிண்டையும் எடுத்துக்கலாம்.''

''எதைப் பத்தின விவாதம்?'' என் றான் ஹரி.

''மதச்சார்பின்மை - செக்குலரிஸம்.''

''எங்க இருக்கு அது?''

''என்ன மேம் சொல்றான் இவன்?''

மைதிலி சிரித்தாள்.

''நீ அவனோடு பேச உட்கார்ந்தா குழம்பித்தான் போவே. நீ உள்ளே என் ரூமுக்கு வா, புஸ்தகம் தர்றேன்''

டீ கோப்பையைக் கீழே வைத்து விட்டு மீரா எழுந்தாள். ஹரி புன்னகை யுடனேயே அமர்ந்திருந்தான்.

''ஹரி, நீ டீயைக் குடி ஆறிப் போகுது'' என்றாள் மைதிலி.

''ஆறிப் போனதும் சூடானதும் எல் லாம் ஒண்ணுதான் ஞானிகளுக்கு'' என் றான் மீரா.

ஹரி மீண்டும் வாய் விட்டுச் சிரித் தான். மைதிலியைப் பின்தொடர்ந்து உள்ளே செல்லும் போது மீரா அவனைத் திரும்பிப் பார்த்தாள். அவன் டீ கோப்பை வைக்கப்பட்டிருந்த மேஜையைக் கையால் ஒருமுறை தடவி விட்டுக் கோப்பையைக் கையில் எடுத்துக் கொண்டான் குருடனைப் போல -

மைகாட். மீரா அதிர்ந்து நின்றாள். இதை ஏன் முதலிலேயே நான் கண்டு கொள்ளவில்லை!

உடனடியாக அவனிடம் சென்று அவன் நிலையைப் புரிந்து கொள்ளாமல் தான் பேசியதற்கு மன்னிப்புக் கேட்க வேண்டும் போலிருந்தது. கண்ணில் நீர் துளிர்க்கும் நிலையில் 'வா மீரா' என்ற மைதிலியின் குரலுக்குப் பணிந்து, அவள் உள்ளே சென்றாள்.

''சொந்த வாழ்க்கையிலே இருக்கிற ஏமாற்றத்தினாலே யார் மேல பாயலாம்னு பார்க்கறாங்க'' என்று மீனாட்சி சொன்னது ஞாபகம் வந்தது. மீனாட்சி பழிக்கிற அள வுக்கு நிச்சயம் மைதிலி கோபக்காரி இல்லை. இவள் விவாகரத்தானவள் என்று மட்டும்தான் மற்ற பெண்கள் சொல்லித் தெரியும். பையனுக்குப் பார்வை கிடை யாது என்று யாரும் சொன்னதில்லை. எத்தனை முட்டாள் நான் - பார்த்ததும் புரிந்து கொள்ளக்கூடிய சூட்சமம் இல்லா தவள் -

''என்ன யோசனை மீரா?''

''ஒண்ணுமில்லே மேம், சொல்லுங்க. கேட்டுக்கிட்டிருக்கேன்.''

மைதிலி தன் பேச்சைத் தொடர்ந்தாள். பேசியபடியே ஏதோ புத்தகத்தைத் தேடி எடுத்தாள். ''இதையும் வெச்சுக்கோ. 'செக் குலரிஸம்' என்கிற தலைப்பிலே இருக்கிற பகுதியை மட்டும் படி. மனசிலே விஷயம் தெளிவாப் பதிஞ்சு போன பிறகு பேசறது

கலபம். நாளைக்கு இயல்பாப் பேசு. எழுதி வெச்சு அதைப் பார்த்துப் பார்த்துப் பேசக் கூடாது'' என்றவள், ''வா நான் உன்னை உன் வீட்டிலே ட்ராப் செய்யறேன்'' என்றாள்.

'வேண்டாம்' என்று சொல்ல நினைத்து, அம்மா சொன்னது நினைவுக்கு வந்ததில், ''சரி'' என்றாள். ''உங்களுக்குச் சிரமமில்லையே?''

''என்ன சிரமம்?'' என்று மைதிலி அவள் கன்னத்தைச் செல்லமாகத் தட்டினாள். வாசல் வராந்தாவில் ஹரியைக் காணவில்லை.

''ஹரி, நான் மீராவை ட்ராப் பண்ணிட்டு வர்றேன், கதவைத் தாழ்ப்பாள் போட்டுக்கோ'' என்று மைதிலி குரல் கொடுத்தாள்.

''சரி'' என்று ஹரி உள்ளேயிருந்து பதில் சொன்னான்.

''பை ஹரி!'' என்றாள் மீரா உற்சாகமாக. ''நா மறுபடி வருவேன் ஃபிலாஸபி பேச.''

''வா! முதல்லே தமிழ் பேசு. அப்புறம்தான் மற்ற விஷயம்!''

மீரா சிரித்தாள்.

''ஓ.கே. பை!''

''பை!''

அவன் வெளியில் வருவான் என்று எதிர்பார்த்தாள். அவன் வரவில்லை.

''வா. நாம் போகலாம். அவன் ஏதாவது வேலையாயிருப்பான்'' என்று மைதிலி வெளிக் கதவை இழுத்து மூடி, ''கதவைச் சாத்திக்கோ ஹரி'' என்று மறுபடி குரல் கொடுத்துக் கிளம்பினாள்.

**வ**ண்டி சற்று தூரம் சென்றதும் கேட்பதா வேண்டாமா என்று தயங்கியபடி ''ஹரிக்குக் கண் தெரியாதா மேம்?'' என்றாள் மீரா.

''தெரியாது'' என்றாள் மைதிலி சாதாரணமாக. ''பிறந்ததிலேர்ந்து.''

''ஓ மைகாட்! நான் சரியான முட்டாள். நான் ஏதேதோ இஷ்டலாப் பேசினேன் அவன் நார்மலானவன் என்கிற நினைப்பிலே.''

''அவன் நார்மலானவன்தான் மீரா. அதிலே சந்தேகமென்ன?'' என்று மைதிலி சொன்னது வியப்பை அளித்தது.

''கண் தெரியல்லேங்கறது ரொம்பப் பெரிய சோகம் மேம். பெரிய இழப்பு.''

''இழப்புதான். ஆனா அதோட வாழப் பழகிண்டிருக்கான். தன் வேலையைத் தானே செய்வான். தான் ஒரு அங்க ஹீனமுள்ளவன் என்கிறதைக் கூட ஒப்புக்க மாட்டான். தான் ஒரு கையாலாகாதவன் என்கிற எண்ணம் அவனுக்கு வரக் கூடாதுன்னு நானும் ரொம்பக் கவனமாக இருக்கேன்.''

அவன் எதிரில் எதையும் உளறி வைக்காதே என்று மைதிலி மறைமுகமாகச் சொல்வது போல் இருந்தது.

''நான் அவனோடு பேச வரலாமா மேம்?''

''வாயேன்! ஆனா 'ஐயோ பாவம்' என்கிற கருணை உணர்வோடு பேசக் கூடாது. அவனை ஒரு நார்மல் மனுஷனா நினைச்சுப் பேசறதுன்னா வா.''

'சரி' என்று தலையாட்டிய போது, இவளால் எப்படி அப்படி நடந்து கொள்ள முடிகிறது என்று வியப்பாக இருந்தது.

''அவன்கிட்ட குறையிருக்கிறதை நீ கண்டுபிடிக்காம போனதே எனக்கு சந்தோஷமா இருக்கு. அவனுக்காக நீ வருத்தப்பட வேண்டியதில்லே. ஹி இஸ் கொய்ட் ஓ.கே. நா வருத்தப்படறதெல்லாம் மீனாட்சி மாதிரி, கையும் காலும் பார்வையும் நல்லா இருக்கிறவங்க திமிர் பிடிச்சு வாழ்க்கையை நாசம் பண்ணிக்கிறாங்களே. அவங்களைப் பத்தித்தான்.''

மீனாட்சியைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும் என்று கேட்பது அநாகரிகமான கேள்வி என்று அவள் பேசாமலிருந்தாள்.

''ஒரு நாளைக்கு மீனாட்சியுடைய அம்மாவைப் போய்ப் பார்த்துட்டு வரணும்னு நினைச்சுக்கிட்டிருக்கேன். வீட்டிலே இவளை கவனிக்க யாருக்குமே நேரமில்லை போலிருக்கு. உனக்கு அவங்களைப் பத்தித் தெரியுமா?''

''தெரியாது மேம்.''

ஹரியைப் பற்றின கவலையை விட மீனாட்சியைப் பற்றி மைதிலி அதிகமாகக் கவலைப்படுவது வினோதமாக இருந்தது.

''ஹி இஸ் கொய்ட் ஓகே.''

எப்படி? அவன் பிற்காலத்தில் என்ன செய்யப் போகிறான்? மைதிலிக்குப் பிறகு யார் பார்த்துக் கொள்வார்கள்? அவளுக்கு நினைக்க நினைக்கக் கண்ணில் நீர் தளும்பிற்று. மனசு முழுவதும் வியாபித்து யாரிடமாவது தனது பரிதவிப்பை வெளியிட வேண்டும் போல் இருந்தது.

வீட்டில், ஹோம்வொர்க்கில் ஆழ்ந்திருந்த மகேஷ் அம்மாவும் அப்பாவும் ஏதோ சங்கீதக் கச்சேரிக்குப் போயிருப்பதாகச் சொன்னான். அவள் தன் அறைக்குச் சென்று உடையைக் கூட கழற்றாமல் எரிக் பேக்கருக்குக் கடிதம் எழுத அமர்ந்தாள்.

''எனக்கு இன்று ஒரு புதிய சிநேகிதன் கிடைத்தான்.''

(தொடரும்)

# பேண்ட் பாக்கெட்டில் ஒரு சிகரெட் பேக்கட்!

"**எ**ன்னங்க இந்த அநியாயத்தைப் பார்த்தீங்களா?" என்று பதறியவாறே வந்தாள் சிவகாமி.

வெளி வராந்தாவில் தம் மகள் அபிராமியுடன் கேரம் விளையாடிக் கொண்டிருந்த செல்லமுத்து, குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தார்.

சிவகாமியின் கையில் சிகரெட் பேக்கட். "இது நம்ம கோபி பேண்ட் பாக்கெட்டிலே இருந்திச்சுங்க."

அவர் அந்த சிகரெட் பேக்கட்டைக் கையில் வாங்கி, உள் உறையை இழுத்துப் பார்த்தார். அதில் நாலு சிகரெட்டுகள் இருந்தன.

"நம்ம கோபிதான் சிகரெட் பிடிக்கிறான்னு நினைக்கிறேன். அவன் வந்ததும் கண்டிங்க."

"வரட்டும் கேட்கிறேன். எனக்கென்னவோ அவன் சிகரெட் பிடிப்பானான்னு சந்தேகமா இருக்கு!"

"கையும் களவுமாப் பிடிபட்டிருக்கான். அப்புறம் என்னங்க சந்தேகம்? இதை முளையிலேயே கிள்ளி எறியணும். ரெண்டு தட்டுத் தட்டிக் கேளுங்க."

"அடிக்கக் கேட்கிற வயசா இது? பிளஸ் டூ படிக்கிறான்."

"அப்ப அப்படியே விட்டிடலாம் கிறீங்களா?"

"நமக்குத் தெரியாம அவன் சிகரெட் பிடிச்சா என்ன செய்வே? எதையும் பக்குவமாச் சொல்லித் திருத்தணும். பருவம் அப்படி!"

"என்ன பருவமோ..."

"நீ அவன்கிட்ட எதுவும் கேட்காதே. சந்தர்ப்பம் வர்ற போது நானே கேட்கிறேன்."

**ம**றுநாள் ஞாயிற்றுக்கிழமை.

கோபியைத் தம் அறைக்குக் கூப்பிட்டார் செல்லமுத்து.

ஏதாவது முக்கியமான விஷயம் இருந்தால்தான் அவர் கூப்பிடுவார் என்று கோபிக்குத் தெரியும்.

"உட்கார்."

உட்கார்ந்தான்.

அவன் படிப்பைப் பற்றிக் கேட்டார். நண்பர்களை விசாரித்தார். பின் சுற்றி வளைத்து விஷயத்திற்கு வந்தார்.

"நேற்று உன் பேண்டைத் துவைக்க எடுக்கிற போது பாக்கெட்டிலே சிகரெட் பெட்டி இருந்ததா அம்மா சொன்னா. நான் அவன் சிகரெட் பிடிக்க மாட்டான்; ஃப்ரண்ட்ஸ் யாராவது வம்பிலே மாட்டி விட வச்சிருப்பாங்கன்னு சொன்னேன். என் ஊகம் சரிதானா கோபி?" மகனை ஏறிட்டார்.

"ஆ... ஆமாப்பா. அந்தக் கணேஷ்..."

"எனக்குத் தெரியும்; நீ நல்ல பையன். அந்தக் கணேஷ் சிகரெட் பிடிப்பானோ?"

"ஆமாப்பா."

"சிகரெட் பிடிக்கிறவங்க எல்லாம்

அருள்நம்பி



கெட்டவங்கன்னு நான் சொல்ல வரலே. ஹெல்த் பாயிண்டிலே பார்க்கிற போது அது வெரி ஹார்ம்புல். உனக்குத்தான் தெரியுமே அதிலே என்ன விஷ சத்து இருக்கு?''

''நிகோடின்.''

''வெரிகுட். என் அப்பா - உன் தாத்தா செயின் ஸ்மோக்கர். அவருக்கு நுரையீரல் புற்றுநோய் வந்து பென்ஷன் வாங்காமலே இறந்திட்டார். நீ தாத்தாவைப் பார்த்திருக்கியா?''

''வராந்தாவிலே உட்கார்ந்து சதா லொக் லொக்குனு இருமிண்டிருப்பாரே...''

''சரியா ஞாபகம் வச்சிருக்கே. புகை பிடிக்கிறவங்களுக்கு முகத்திலே கருக்கங்கள் விழுந்து, இளமையிலேயே முதுமை ஆகி விடுகிறார்கள் என்று அமெரிக்க ஆராய்ச்சியாளர்கள் எழுதின ஆர்டிகிள் இதிலே இருக்கு. படிச்சுப் பார். உன் ஃப்ரண்ட் - அதான் உன் பாக்கெட்டிலே சிகரெட் பெட்டியை வச்சானே அவனையும் படிச்சுப் பார்க்கச் சொல்லு...''

''சரிப்பா.''

''இளமையிலே ஒரு பழக்கத்துக்கு அடிமை ஆகிட்டா சாகிற வரை அதைவிட முடியாதுன்னு சொல்லுவாங்க. தமிழிலே கூட இதுக்கு ஒரு பழமொழி இருக்கே... எங்கே சொல் பார்க்கலாம்...''

''தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்...''

''கரெக்ட். இன்னொரு விஷயம் கோபி. தினமும் ஒரு பேக்கட் சிகரெட் வீதம் ஐந்து வருஷம் தொடர்ந்து பிடிச்சா அவங்களுக்கு 'பெனைல் ஆர்டரியோ பஸ்க் லெராஸிஸ்' என்ற நோய் வருதாம். அது என்ன நோய் தெரியுமா?''

''தெரியலைப்பா.''

''அதுதான் ஆண்மைக் குறைவு. இதை நான் சொல்லலேப்பா, பாஸ்டன் பல்கலைக் கழக ஆராய்ச்சியாளருங்க சொல்றாங்க. என்னடா அப்பா இவ்வளவு தூரம் சொல்றாரே நம் மேலே சந்தேகப்படுறாரோன்னு நினைக்காதே. நீ தங்கமான பையன். இதை எல்லாம் உன் நண்பன் கணேஷ்கிட்டச் சொல்லணும், அதுக்குத்தான்.''

''கண்டிப்பாச் சொல்றேன்.''

''சிகரெட் பிடிக்கிறதாலே தங்களுக்கு ஒரு சமுதாய அந்தஸ்து கிடைக்கிறதுன்னு சில இளைஞர்கள் நினைக்கிறாங்க. இது மாபெரும் தவறு. சமீபத்திலே பெண்களிடம் ஒரு சர்வே பண்ணினாங்க. அதிலே 90 சதவீதம் பெண்கள், புகைக்கும் ஆண்களை விரும்புறதில்லேன்னு தெரிஞ்சது... சரி, அந்த கணேஷ் ஃபாதர் என்ன தொழில் பண்றார்?''

''தெரியலைப்பா.''

''ஒருதரம் அவனை நம்ம வீட்டுக்குக் கூட்டி வா!''

''கூட்டி வர்றேன்.''

''சரி நீ போ. எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கு.''

இனிமேல் சிகரெட் பிடிப்பதில்லை என்ற சத்தியப் பிரமாணத்துடன் கோபி அந்த அறையை விட்டு வெளியேறினான்.

தம் உபதேசத்தைக் கேட்ட தம் மகன் இனி கண்டிப்பாகத் திருந்தி விடுவான் என்று நினைத்தார் அந்தக் கல்லூரிப் பேராசிரியர்.

## 'A' யைத் தாண்டிய 'B' படங்கள்!

மதுரையில் சில தியேட்டர்களில் 'A'யைத் தாண்டிய 'B'(lue) படங்களை ஒரு வேண்டுதல் போல் தொடர்ந்து காட்டிக் கொண்டிருக்கிறார்கள். சட்டத்தால் அத்தனை சுலபமாக நடவடிக்கை எடுக்க முடிவதில்லையாம். இருப்பினும் மதுரை முத்து உயிரோடிருந்த காலத்தில், அதுமாதிரியான தியேட்டர்காரர்கள் சட்டத்திலுள்ள ஓட்டைகளின் வழியாகத் தப்பித்து விடுகிறார்கள் என்பதையுணர்ந்து, அந்தந்தத் தியேட் டர்களுக்குத் தமது ஆட்களை அனுப்பிக் கொஞ்சம் 'தடாலடியாக' அறிவுரை செய்வார் என்பதால், அப்போதெல்லாம் இது மாதிரியான படங்கள் மதுரை நகருக்குள் நுழைந்ததேயில்லையாம்.


ஈ.வி. சரோஜா

திரும்பிப் பார்க்கிறேன் - 9

# மீண்ட சொர்க்கம் : வாழ்வில் திருப்பு முனை!

'அகல் விளக்கு' திரைப்பட ஷூட்டிங்கின் முதல் ஷெட்யூல் முடிந்து இரண்டாவதை ஆரம்பிக்க முடியாமல் ஏற்பட்ட சிக்கல் -

ஈ.வி. சரோஜா கருவுற்றதுதான்!

அவருக்குக் குழந்தை பிறக்கும் வரை - ஏன் அதற்குப் பின்னரும் கூட சில மாதங்கள் - காத்திருக்க வேண்டுமே, என்ன செய்வது?

மதுரம் பிக்சர்ஸ் நிர்வாகிகள் யோசித்து, அந்தப் படத்தை அப்படியே நிறுத்தி வைத்து விட்டு வேறு ஒரு படம் எடுக்க ஆரம்பிப்பது என்று தீர்மானித்தனர். அப்படி இரண்டாவது படம் எடுக்கும் போது, டி. ஆர். ரகுநாத்தை டைரக்ட் செய்யச் சொல்வது என்றும் அவர்கள் ஏற்கெனவே தீர்மானித்து, அவரிடம் பேசியும் இருந்தனர்.

எனவே நான் மறுபடியும் கதை - வசனம் மட்டும் எழுதித் தர வேண்டிய நிலைக்கு உள்ளானேன். மகிழ்ச்சியோடு ஒப்புக் கொண்டு எழுதவும் செய்தேன்.

மதுரம் பிக்சர்ஸார் என் கதை - வசனத்தைப் படித்துப் பார்த்தார்கள். அதில் நடிக்க ஜெமினியையும் பத்மினியையும் 'புக்' பண்ணுவதுதான் பொருத்தமாயிருக்கும் என்ற எங்கள் யோசனையையும் ஏற்றார்கள்.

அவ்வாறே செய்து விட்டு டி.ஆர்.ரகுநாத்துக்குத் தகவல் தெரிவித்தார்கள். ஆனால் ரகுநாத், அப் படத்தில் எஸ். எஸ். ஆர். தான் நடிக்க வேண்டும் என்று விரும்பினார்!

இந்தக் குழப்பத்தினிடையில் ஷூட்டிங் தினங்கள் முடிவாகி, அந்தத் தேதியும் வந்து விட்டது! பிற்பகல் கால்ஷீட்.

ஷூட்டிங்குக்கான ஏற்பாடுகள் மும்முரமாக நடந்து கொண்டிருந்தன. நானும் கிருஷ்ணமூர்த்தியும் செட்டில் இருந்தோம். நேரமாகிக் கொண்டிருந்ததே யொழிய, ரகுநாத்தோ அவரது யூனிட்காரர்களோ வரவில்லை. டென்ஷன்...

இரண்டு மணியிருக்கும். ரகுநாத்திடமிருந்து தகவல் வந்தது. ''குழப்பமான சூழ்நிலையில் இந்தப் படத்தை டைரக்ட் செய்ய ரகுநாத் விரும்பவில்லை'' என்பது தான் செய்தி.

''என்ன கிருஷ்ணமூர்த்தி, கடைசி நிமிஷத்தில் இப்படியாகி விட்டதே'' என்றேன் அதிர்ச்சியை மறைக்க முடியாமல்.

மதுரம் பிக்சர்ஸ் நிர்வாகிகள் கையைப் பிசைந்து கொண்டு நின்றனர். ''ஷூட்டிங்கை கேன்ஸல் செய்வதா, தொடர்வதா? தொடர்வது என்றால் யார் டைரக்ட் செய்வது?'' - கேள்விகள் விசுவரூபமெடுத்தன.

மதுரம் பிக்சர்ஸ் எங்களுக்கு ஒரு சகோதர நிறுவனம் போல என்று ஏற்கெனவே சொன்னேன், நினைவிருக்கிறதல்லவா? அதனால் கிருஷ்ணமூர்த்தி தமக்கும் பொறுப்பு இருப்பதாக எண்ணினார். ''ஸ்ரீதர் நீயே டைரக்ட் செய்து விடு'' என்றார்.

''என்னது!'' என்று நான் மறுபடியும் அதிர்ச்சி அடைந்து கேட்டேன்.

''ஆமாம் ஸ்ரீதர், ஆர்டிஸ்ட்டுங்க வந்துக்கிட்டிருக்காங்க. கால்ஷீட் வேஸ்ட் ஆகக் கூடாதுன்னா இதுதான் வழி.''

''ஒரு பெரிய டைரக்டர் வேண்டாம் என்று விலகி விட்ட நிலையில் அந்த இடத்தில் அதிக அனுபவம் இல்லாத நான் புகுவது சரியாய் இருக்குமா? இண்டஸ்டிரி ஒப்புக் கொள்ளுமா? மக்கள் ஏற்பார்களா?''

''அவ்வளவெல்லாம் யோசிக்க இப்போ நேரமில்லே. மதுரம் பிக்சர்ஸுக்கு ஏற்கெனவே ஒரு படம் முதல் ஷெட்யூலோடு நின்று போனதில் நஷ்டம். இப்போ மறுபடி நஷ்டம் ஏற்பட நாம் அனுமதிக்கக் கூடாது.''

''அது சரி, ஆனா என்னோட நிலையையும் யோசிக்கணும் இல்லையா?''

''கமான் ஸ்ரீதர், யூ கேன் டூ இட்! யூ கேன் ரைஸ் அப் டு தி அகேஷன்!'' என்றார் கிருஷ்ணமூர்த்தி.

அந்தச் சொற்கள் மந்திரம் மாதிரி வேலை செய்தன. ''ஓகே! ஐ வில் டைரக்ட் திஸ் ஃபிலிம்'' என்றேன்.

ஒரு மணி நேரத்துக்குள் என் யூனிட்டைச் சேர்ந்தவர்கள் தயாராகி விட்டனர். மேக்-அப் போட்டாகி விட்டது. மூன்று

**டைரக்டர் ஸ்ரீதர்**

மணிக்கு - குறித்த நேரத்துக்கு ஒரு மணி தாமதமாக - ஷூட்டிங் ஆரம்பமாகி விட்டது!

**ஆ**க மொத்தம் எனக்கு இரண்டாவது தடவையாகக் கிடைத்த டைரக்ஷன் வாய்ப்பும் எதிர்பாராமல், தெய்வாதீனமாக அமைந்ததுதான்! அந்தப் படம்:

''மீண்ட சொர்க்கம்.''

என் வாழ்க்கையிலும் காமிராமேன் வின்ஸெண்ட் வாழ்க்கையிலும் 'மீண்ட சொர்க்கம்' ஒரு திருப்புமுனை. 'கல்யாணப் பரிசு', கதை சொல்லப்பட்ட விதத்துக்காகப் பாராட்டுப் பெற்றது என்றால், 'மீண்ட சொர்க்கம்' காட்சிகள் அமைக்கப்பட்டவிதம், காமிரா கோணங்கள் ஆகியவற்றுக்காகப் பாராட்டப் பெற்றது. வர்த்தக ரீதியில் பிரமாத வெற்றி என்று கூற முடியாவிட்டாலும் பத்திரிகைகள், ''மீண்ட சொர்க்கம் ஸ்ரீதரால் எழுதப்பட்ட திரைக் காவியம் - கவிதை'' என்றெல்லாம் பாராட்டின.

படத்தின் கிளைமாக்ஸை குற்றாலத்திலிருந்து ஏழெட்டு மைல் தூரத்தில் மலைமேல் ஒரு கிராமத்தில் எடுத்தோம். யூனிட் மொத்தமும் பதினாலு நாட்கள் அந்தக் கிராமத்திலேயே தங்கியிருந்து உழைத்தது. ஸ்ரீதர், வின்ஸெண்ட், திருச்சி அருணாசலம், ஆர்ட் கங்கா, எடிட்டர் சங்கர் என்று அந்த யூனிட் விரிவடைந்ததுடன் ஒருவரோடு ஒருவர் ஒத்துழைத்து ஒற்றுமையாகப் பணியாற்றியது.

**மீ**ண்ட சொர்க்கத்தையடுத்து வீனஸ் பிக்சர்ஸில் கல்யாணப் பரிசையே தெலுங்கில் எடுத்தோம். ''பெல்லிகானுக'' என்ற தலைப்பில் எடுக்கப்பட்ட அந்தப் படத்திலும் சரோஜாதேவிதான் கதாநாயகி. ஹீரோ நாகேஸ்வரராவ். படம் அபார வெற்றி பெற்றது.

''பெல்லிகானுக'' எடுக்கப்படும் போதே எங்கள் மனத்தில் ஓர் எண்ணம் : ''இதை ஹிந்தியிலும் எடுத்தால் என்ன?'' எங்கள் எண்ண ஓட்டத்தை சரோஜாதேவி எப்படியோ படித்து விட்டார்! அப்போது ஹிந்தி பட உலகில் பிரபலமடைந்திருந்தவர் வைஜயந்திமாலா என்பதும் அவருக்குத் தெரிந்ததுதானே!

''ஸார்! தமிழ், தெலுங்கு ரெண்டிலயும் நடிச்சுக் கொடுத்திருக்கேன். ஹிந்தியில் என்னை மறந்துடாதீங்க!'' என்றார். நாங்களும் அவர் கூற்றில் ஒரு நியாயம் இருப்பதை உணர்ந்து, ''சரி'' என்றோம்.

ஹீரோவாக யாரைப் போடுவது? பல பெயர்கள் அடிபட்டன. ''ஏன், ராஜ்கபூரையே நடிக்கக் கோரினால் என்ன?''



''திறமையான நடிகர்தான் என்றாலும், அவர் நடிப்பில் நகைச்சுவை உணர்வு தூக்கலாக இருக்குமே, அழுத்தமான கதாபாத்திரத்துக்கு ஒத்து வருமா?''

விவாதம் வளர்ந்தது. கடைசியில் ராஜ் கபூரையே அணுகுவது என்று தீர்மானித்தோம்.

**இ**தற்கிடையில் ''பெல்லி கானுக'' படத்தின் ஷூட்டிங்கும் வளர்ந்து, முடிவடையும் தருவாயில் இருந்தது. ஒரு நாள் தமக்கு உடம்பு சரியில்லை என்று தகவல் அனுப்பினார் சரோஜாதேவி.

''சரி, ரெஸ்ட் எடுத்துக் கொள்ளட்டும்'' என்று அன்றைய ஷூட்டிங்கை கான்ஸல் செய்து, நாகேஸ்வர ராவிடமும் ''ஸாரி'' சொல்லி வீட்டுக்கு அனுப்பி வைத்தோம்.

சில நாள் சென்று மறுபடியும் இருவரிடமும் ஒரு டேட் வாங்கி, படத்தை எடுத்து முடித்தோம்.

அன்று ஷூட்டிங் முடிந்த பின் சரோஜாதேவி என்னிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டார். ''மீண்டும் சந்திப்போம், சார்'' என்றார். 'ஹிந்தி பட ஷூட்டிங் விரைவில் ஆரம்பமாகும்' என்ற எதிர்பார்ப்புடன் இப்படிக் கூறி விடை பெற நினைத்தார்.

நான் சொன்னேன் : ''சரோ! உங்க ஆசைப்படியே உங்களை ஹிந்தி கல்யாணப் பரிசு படத்தில் நடிக்க வைக்கணும்னு தான் இருந்தேன்; ஆனால் அந்த முடிவை மாத்திக்கிட்டேன். ஸாரி.''

''ஏன் சார்? ஏன் சார்?'' என்று பதறினார் சரோஜாதேவி.

''உடம்பு சரியில்லேன்னு சொல்லி ஷூட்டிங்கை கான்ஸல் பண்ண வைச்சுட்டு அன்னிக்கு நீங்க ஒரு காரியம் பண்ணினீங்களே, அதுதான் காரணம்'' என்றேன்.

சரோஜா தேவி அன்று செய்த அந்தக் காரியம் என்ன? அதைச் சொல்வதே அடுத்த வாரம் என் முதல் காரியம்!

நீங்கள் கேட்டவை - தராசு

# கலெக்டர் மாநாடு குறித்து கோபாலபுரத்தார் கடிதம் படித்தீர்களா?




☛ கலெக்டர் மாநாடுக்கு... ... காட்டமான எதிர்ப்பு




☛ சிரிக்க வழி?

☛ ஊருக்கு உபதேசம்



☛ முதல்வராக வாய்ப்பு?

● ஜெயா ஸ்ரீனிவாசன், பழனி.

? டி.வி.யில் உரையாற்றும் போது, சிக்கனமாக எல்லோரும் இருக்க வேண்டும் என்று நாவலர் சொன்னாரே? அரசுக்குப் பொருந்துமா?

! ஊருக்கு உபதேசம் செய்வதோடு சரி.

● ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

? நமது பிரதமர் சிரிக்க வழியே இல்லையா?

! அதானே! கின்னஸ்ஸில் இடம்பெறும் வகையில் ஐந்து லட்சம் வோட்டு வித்தியாசத்தில் வென்றும் மனுஷன் சிரிக்கவில்லையே? ஒருவேளை வோட்டு வித்தியாசத்தை அதிகரித்துக் காட்டப் பிரதமர் தொகுதியிலும் நடந்த தேவையற்ற தில்லுமுல்லுகள் அந்தச் சிரிப்பைத் துடைத்து எறிந்து விட்டிருக்கலாம்.

● வ. தே. பாலசுப்பிரமணியன், சென்னை.

? தென் ஆப்பிரிக்க கிரிக்கெட் குழுவின் திறமைகளைக் குறைத்து மதிப்பிட்டு விட முடியாது இல்லையா?

! அதை மூன்றாவது ஒருநாள் போட்டியின் முடிவில்தான் பலர் புரிந்து கொண்டார்கள்!

● எம். ஜாபர் ஸலாம், திட்டச்சேரி.

? குஷ்பு தமிழ்நாட்டின் முதல்வராக வாய்ப்புண்டா?

! நம்ம தலையெழுத்து, இங்கே என்ன வேணுமானாலும் நடக்கலாம்.

● வேடப்பட்டி கற்குவேல், திருவனந்தபுரம்.

? தராசு என்ன வெட்டுத் தராசா? நான் கேட்ட பத்துக்கு மேற்பட்ட கேள்விகளுக்குப் பதிலைக் காணோமே?

! தராசில் வைக்கப்படும் அளவுக்குக் கேள்வியில் வெய்ட் இருக்க வேண்டாமா, வேடப்பட்டியாரே!

● அ. முஸ்தபா, தக்கோலம்.

? ஸ்ரீகாந்தின் ஆட்டம் எப்படி?

! 'கடவுள் கைவிடாத வரை' அபாரம்தான்.

● ஆர். வேல்முருகன், திட்டக்குடி.

? தற்போது மறுக்க முடியாத அரசியல் உண்மை?

! மத்தியிலும் சரி, மாநிலத்திலும் சரி, சரியான எதிர்க்கட்சி இல்லாதது...

● மா. பழனிசாமி, கோவை.

? மற்ற நாடுகளை விட இந்தியா எந்த விஷயத்தில் கறுகறுப்பாயிருக்கிறது?

! எந்தெந்த விஷயங்களில் மெத்தனம் காட்ட வேண்டுமோ அந்த விஷயங்களில் கறுகறுப்புக் காட்டுகிறது. எவற்றில் கறுகறுப்புடன் செயல்பட வேண்டுமோ அவற்றிலெல்லாம் மெத்தனம் காட்டுகிறது.

● கே. ரமேஷ்ராம், செங்குன்றம்.

? வர்மா கமிஷன் விசாரணை பற்றி...?

! முன்னுக்குப் பின் முரணான சாட்சியங்களை வைத்துக் கொண்டு பாவம், எப்படித்தான் ஒரு முடிவுக்கு வரப் போகிறாரோ!

● குயில் குமார், காரைக்குடி.

? மக்களவை இடைத் தேர்தல் முடிவு தெரிந்தால் இ. காங்கிரஸ் - அ. இ. மு. க. உறவைப் பாதிக்குமா?

! இ. காங்கிரஸ் தன் பலத்தைச் சற்று அதிகரித்துக் கொண்டிருந்த போதிலும் அ. இ. மு. க. உறவு தேவையில்லை என்று கூறுமளவுக்கு மெஜாரிட்டி பலம் பெறவில்லையே. அதனால் உறவு பாதிக்கப்படாது நீடிக்கும்.

● ஆர். நெடுஞ்செழியன், சென்னை.

? இந்தியாவின் நடவடிக்கைகள் காரணமாக விடுதலைப் புலிகளின் போராட்டம் பின்னடைவு காணுமா?

! ஐந்து தமிழ்ப் பெண்களைப் பிடித்து வைத்துக் கொண்டு அவர்கள் விடுதலைக்கு விலையாகப் புலிகள் ஐந்து லட்சம் கேட்பதிலிருந்தே புரிந்து கொள்ளலாமே, இது பின்னடைவு கண்டிருப்பதற்கு மேலும் ஒரு சான்று என்று!

● மு. க. தி. க. பாலசுப்பிரமணியன்,
முசிறி.

? தேச விரோதிகளுடன் தி. க. வின் தொடர்பு தொடர்ந்து நிரூபணமாகி வருகிறதே?

! ராஜீவ் கொலை தொடர்பாகக் கைது செய்யப்பட்டிருப்பவர்களில் தி. க. வினர் யாருமே இல்லை என்று வீரமணி அறிக்கை விட்ட போதிலும் பத்திரிகைச் செய்திகள் அதைப் பொய்ப்பிக்கின்றன. ஆனால் ஒன்று. விடுதலைப் புலிகளிடம் அனுதாபம் கொண்டிருந்தது - கொண்டிருப்பது என்பது வேறு. ராஜீவ் கொலைத் திட்டத்தில் தெரிந்தே நேரடியாகவோ மறைமுகமாகவோ பங்கு கொண்டிருந்தது என்பது வேறு. இரண்டையும் ஒன்றாக்கத் தமிழக அரசும், காவல் துறையும், ஸி.பி.ஐ. யும் முயன்றாலும் நீதிமன்றம் ஒப்புக் கொள்ளாது என்றே கருதுகிறேன்.

● எம். சந்திரசேகர், மேட்டுமகாதானபுரம்.

? போயஸ் தோட்டத்தில் கலெக்டர் மாநாடு நடந்ததற்கு கோபாலபுரம் எழுதிய கடிதம் படித்தீரா? ❑

! அநாகரிகமான அபத்தமான கடிதம். காய்கறி நறுக்கிக் கொண்டே கலெக்டர் மாநாடு நடக்கும் என்றெல்லாம் எழுதி விட்டு, இப்போது அதிகாரிகள் கலந்து கொள்ளவில்லை என்பதுதான் பிரதான குற்றச்சாட்டு என்று விளக்க உரை, கருத்துரை எல்லாம் தந்து கொண்டிருக்கிறார்கள். முதல்வரின் வீடு, பிரதமரின் வீடு எல்லாம் 95 சதம் காரியாலயம்தான். ஏன் கருணாநிதியே கோபாலபுரத்தில் ஃபைல் பார்த்ததில்லையா? அதிகாரிகளை அழைத்துப் பேசியதில்லையா? பிரிட்டனின் நெ. 10 டவுனிங் தெருவில் எத்தனை முக்கியமான முடிவுகள் எடுக்கப்படுகின்றன; வெள்ளை மாளிகை அமெரிக்க ஜனாதிபதியின் காரியாலயமாகவும் விளங்குவது கருணாநிதிக்குத் தெரியாதா? குற்றம் குறைகளை எடுத்துக்காட்ட வேண்டியதுதான். அதற்காக அச்சப் பிச்சென்று எழுதக் கூடாது. அதுவும் கருணாநிதியிடம் நாம் இதை எதிர்பார்க்கவில்லை.

● கே. வேல்சாமி, மதுரை.

? டீவி - அற்புதமான மக்கள் தொடர்புக் கருவியை இப்படி டீவி நிலையத்தார் பாழ்பண்ணுகிறார்களே என்று வேதனைப் பட்டதுண்டா?

! நிகழ்ச்சிகளின் தரம் மோசமாயிருக்கிறது என்று வேதனை ஒருபுறம். இத்தனை லஞ்ச ஊழல் தாண்டவமாடுகிறதே என்ற துயரம் மறுபுறம். சமீபத்திய நீதிமன்றத் தீர்ப்பு கூட தனியாருக்கு நிகழ்ச்சி தயாரிக்கப் பணம் ஒதுக்கப்படுவதில் எத்தனை முறைகேடுகள் உள்ளன; விளம்பரதாரர் நிகழ்ச்சிகள் தயாரிக்க அனுமதி பெறுவதில் எத்தனை கோல்மால்கள் உள்ளன என்றெல்லாம் பட்டியலிட்டிருக்கிறது. தூர்தர்ஷனின் போக்குக்கு இதை விடப் பெரிதாக யார் கண்டனம் தெரிவிக்க முடியும்? ஆனால் டீவி அரசு இலாக்காவின் ஏக போக்கியமாக இருக்கும் வரை, லஞ்ச ஊழல், நிகழ்ச்சிகளின் படுமோசமான தரம் ஆகிய இரண்டுக்குமே பரிகாரம் காண முடியாது.

● எஸ். வைத்தியநாதன்,
திருவெண்ணெய்நல்லூர்.

? Day-Night கிரிக்கெட் மாட்ச் பார்த்தீர்களா?

! காரியாலயத்திலிருந்து லேட்டாகத் திரும்பி வந்தாலும் பார்க்க முடிவது ஒரு வசதி. பச்சை உடை வெள்ளைப் பந்து ஒரு மாறுதல். தென்னாப்பிரிக்கரின் அட்டகாச ஆட்டம் தூக்கத்தை விரட்டியது.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
எம். சந்திரசேகர்,
மேட்டு மகாதானபுரம் (அஞ்சல்)
குளித்தலை (வட்டம்)
திருச்சி - 639 105.

போட்டிக் கவிதை

# ஓ... மீன் குஞ்சே...!

50

■ தண்ணீர் வானத்தில்
மின்னலடித்து நீந்தும்
ஓ... மீன் குஞ்சே!

■ நீ கற்றறிந்தது அல்ல
நீச்சல் கலை.
கருவிலே உனக்கது
கைவந்த கலை.

■ உன்னை எனக்கு
மிகவும் பிடிக்கும்.

■ நீர்வழி செல்லும்
மிதவையாகாமல்
நீரை எதிர்த்து
நீச்சலிடும்
நெஞ்சுரம் உன்னிடம்
நிரம்ப இருப்பதால்!

■ ''மானம் இழந்தபின்
வாழாமை முன் இனிது''
என்பார்கள்.





■ நீரை இழந்தபின் -
நிச்சயம் நீ
வாழ்வதே இல்லை!

■ தவளையைப் போல்
நீ
தண்ணீரிலும் தரையிலுமா
வாழ்கிறாய்?

■ அதுதான் இல்லை!

■ வாழ்வென்றால்
அது தண்ணீரோடுதான்.

■ உன் கொள்கை வாழ்வை
நினைத்தால்
எனக்குப் புல்லரிக்கிறது!

■ மனிதனது
குரங்கு வாழ்வை நினைத்தால்
மனமோ கொதிப்படைகிறது!

- பல்லவன்

# இனிப்பு சுவைக்க முடியாதவர்களுக்கு
# இனிய செய்தி!




ஆரோக்கிய வாழ்விற்கு
அன்று அநுமன் அளித்ததோ சஞ்சீவிமலை
இன்று ஆசியா டீ அளிப்பதோ
டயாப்டீ மூலிகை தேயிலை




- ☐ இயற்கை அன்னை வழங்கிய,
  சர்க்கரை நோயை தீர்க்க
  வல்ல -
  ஜிம்னிமா சில்வெஸ்டர்
  கமிலீயா சினென்சீஸ்
  மருத்துவ மூலிகைகளால்
  தயாரிக்கப்பட்டது டயாப்டீ
- ☐ ரத்தத்தில் சர்க்கரை
  சத்தை குறைக்க வல்லது;
  சர்க்கரை வியாதியிலிருந்து
  விடுதலையளிப்பது டயாப்டீ
- ☐ நோய் எதிர்ப்பு சக்தியை தரும்
  ஆரோக்கிய பானம் டயாப்டீ

**தமிழகத்திற்கு
அறிமுகம்**

உலகமே வியக்கும்
மூலிகை தேயிலை...

# டயாப்டீ

## மூலிகை தேயிலை!

அருந்துவீர் ஆரோக்கியம் பெறுவீர்

உற்பத்தியாளர்கள் : **ஆசியா டீ என்டர்பிரைசஸ்**




கேத்தி (அஞ்சல்), நீலகிரி - 643215 ☎ 3068
99, G. S. T. சாலை, பல்லாவரம்
சென்னை - 43 ☎ 401816, 403435

VIBGYOR/ASIA/09/91/TAM



என்று கோரப்படுவதால் சட்டத்திற்குப் புறம்பாகத் தம்மால் ஏதும் செய்ய முடியாமல் போகிறது என்கிறார். இன்னும் சில சொந்தச் சண்டைகளைப் பற்றிய மனுக்கள்.

''கலெக்டர் என்பவருக்கு எல்லா அதிகாரங்களும் குவிந்து கிடப்பதாகப் பெரும்பாலான மக்கள் நினைத்துக் கொண்டிருப்பதால் எல்லாப் பிரச்னைகளையும் என்

# “நான் பெண் என்பதாலேயே புகார் மனுக்கள் அதிகமாயுள்ளன!”

“சராசரியாக முன்பு நூற்றைம்பது புகார் மனுக்கள்தான் வந்தன என்றால், இப்போது முந்நூறுக்கும் மேற்பட்ட மனுக்கள் வருகின்றன. காரணம், எனக்குத் தமிழ் தெரியும் என்பது மட்டுமல்ல; நான் பெண்ணாக இருப்பதும்தான்!'' என்கிறார் மதுரை மாவட்டக் கலெக்டர் திருமதி கிரிஜா வைத்தியநாதன்.

வருகிற மனுக்களில் பெரும்பான்மை வீட்டு மனைகள் கேட்டு வரும் மனுக்கள் தானாம். அதுவும் குளம் போன்ற இடங்களில் வீட்டு மனைப் பட்டா வேண்டும் னிடமே கொண்டு வருகிறார்கள். சிவில் மேட்டர்களிலெல்லாம் என்னால் தலையிட முடியாது என்றாலும் அவர்கள் நம்ப மறுக்கிறார்கள். இதையெல்லாம் அவர்களுக்கு எப்படிப் புரிய வைப்பதென்றே தெரியவில்லை. அதனால் குறைந்தபட்சம் அவர்களின் குறைகளை முகம் கோணாமல் காது கொடுத்துக் கேட்டுக் கொள்கிறேன்'' என்கிறார் கிரிஜா வைத்தியநாதன்.

சில சமயங்களில் போலி ரேஷன் கார்டு சம்பந்தப்பட்ட புகார்களும் வருகின்றனவாம். ஆனால் அவையெல்லாம் மேலோட்டமானவை. ''இன்னின்னாரிடம்

---

# மதுரை: துணுக்குச் செய்திகள்

## கில்'லேடி'கள்!

●● பிளாட்பாரத்தின் அரை ஏக்கருக்கு மனித நெருக்கம். அமைச்சர் அழகு திருநாவுக்கரசுவை வரவேற்க மதுரைத் தொண்டர்கள் வரிசையில் நின்று மாலை அணிவித்துக் கொண்டிருந்தனர். அணிவிக்கப்பட்ட மாலை பின்புறமாய்க் கழற்றிப் போடப்பட, கூடைகளில் பத்திர மாய் அள்ளிக் கொண்டு நகர்ந்தனர் பூ விற்கும் பெண்கள். நெருங்கி விசாரித்தால், ''கலையாம இருந்தா கடைகள்ல மறுபடி சல்லீசு விலைக்கு வித்திடுவோம். இல்லை உதிரிப் பூவாக்கி, உருவா கிடைக்குமில்ல? எதுக்கு வேஷ்ட் ஆவணும்?''

## வெள்ளாடு பெரும்பாடு!

●● சாலைகளில் வீதி நாடகங்கள் நடக்கின்றன. நெருங்கிக் கவனித்தால் 'சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பு' பற்றி பிரசார நாடகம். கல்லூரி மாணவர்களை



இருப்பவை போலி ரேஷன் கார்டுகள் என்று குறிப்பிட்டுச் சாட்சி சொன்னால் தானே என்னால் நடவடிக்கை எடுக்க முடியும்?'' என்கிறார்.

மதுரை நகருக்குள் குடிநீர்ப் பிரச்னைகள் இல்லையென்றாலும் மற்ற பகுதிகளில் இருக்கத்தான் செய்கின்றன என்பதை ஒப்புக் கொள்ளும் கலெக்டர், ''எந்தவொரு சிறு வேலையைக் கூட அரசுதான் வந்து செய்ய வேண்டும் என்று மக்கள் நினைக்கிறார்கள். மக்களின் சுயதேவைப் பூர்த்திக்கு அரசு உதவிக்கரம்தான் நீட்ட முடியும் என்பதை மறந்து விடுகிறார்கள். முதலில் இந்த மனோநிலை மாற வேண்டும்'' என்கிறார்.

மதுரை நகர ஆட்டோக்காரர்கள் மீட்டர் போடவே மாட்டார்களா என்றால், அதைச் செயல்படுத்துவது எப்படி என்பதில்தான் பிரச்னை என்பதை அவரும் ஒப்புக் கொள்கிறார். சில தியேட்டர்களில் 'A' யைத் தாண்டிய 'B'(lue) படங்கள் ஓடுவது பற்றிக் கலெக்டரும் அறிந்திருக்கிறார்.

''ஒருமுறை அது மாதிரியான தியேட்டர் ஒன்றைக் கண்டுபிடித்து நடவடிக்கை எடுக்க முயன்ற போது, சட்டத்திலுள்ள சில ஓட்டைகள் தியேட்டர்காரர்களுக்குச் சாதகமாக இருந்து விட்டன. அதனால் உடனடி நடவடிக்கை என்பது சாத்தியமில்லாமல் போகிறது'' என்கிறார்.

கலெக்டர் என்கிற முறையில் இவர் இப்போது மிகவும் தீவிரம் காட்டுவது, 'எல்லோருக்கும் எழுத்தறிவு' என்கிற 'அறிவொளி' இயக்கத்தில். அதிலும் குறிப்பாகப் பெண்களுக்கு எழுத்தறிவு என்பதில் மிகுந்த ஆர்வம் காட்டுகிறார். ''பெண்கள் இயற்கையிலேயே ஆண்களை விடக் குடும்பப் பொறுப்பு மிகுந்தவர்கள். இதற்கு ஓர் உதாரணம், ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டத்தின் கீழ் வழங்கப்படும் கடன்களையே சொல்லலாம். பெண்களின் பெயர்களில் வழங்கப்பட்ட கடன்கள் திரும்பி வராமல் போனதேயில்லை. எனவே, எந்தவொரு செயலும் குடும்பம் முழுமைக்கும் சென்று சேர்ந்து பயன்கொடுக்க வேண்டுமானால், அது பெண்களின் வழியாகத்தான் செல்ல வேண்டும்'' என்கிறார்.

ஐ. ஏ. எஸ். பணி என்பது அடிக்கடி இடமாறுதல்களுக்கும் பணி மாறுதல்களுக்கும் உட்பட்ட பணி என்பதால், அதன் காரணமாக எப்போதாவது ஏமாற்றமோ, மனச்சோர்வோ ஏற்பட்டதா என்றால், ''நிச்சயமாக இல்லை'' என்று மறுக்கிறார். ''கொடுக்கப்படுகிற பணியில் மட்டுமே பற்று என்றால் யாருக்கும் எந்தப் பணியிலும் எப்போதும் பிரச்னையே இல்லை. அப்படியல்லாமல், பதவியின் மேலும் அதன் காரணமாகக் கிடைக்கும் அதிகாரங்களின் மேலும் பற்று வைக்கும் போதுதான் பிரச்னைகள் ஆரம்பமாகின்றன'' என்கிறார், ஆறு வயது மகனுக்கும் இரண்டு வயது மகளுக்கும் தாயான திருமதி கிரிஜா வைத்தியநாதன்.

– எஸ். ஐ.

---

யும் மற்றும் பற்பலரையும் திரட்டிப் பணியாற்றுபவர் கடாட்ச மணி. அமெரிக்கன் கல்லூரியிலிருந்து ஓய்வு பெற்று வாழ்க்கையை இந்தப் பணிக்காக அர்ப்பணித்துக் கொண்டுள்ளார். EPIC என்ற பெயரில் இயங்கி வரும் அமைப்பு. கடாட்சமணி தெரிவித்த ஒரு தகவல் : மதுரையில் வெள்ளாடுகள் அதிகம். அவற்றிடமிருந்து மரம் செடி கொடிகளைக் காப்பது பெரும்பாடு!

## பகலில் கல்யாணம்; இரவில் சினிமா!

●● மதுரையிலுள்ள விக்டோரியா எட்வர்ட் ஹால் பகலில் லைப்ரரியாகவும், மாலை ஆறு மணிக்கு மேல் தியேட்டராகவும் மாறி விடும். இந்த விநோதம் 1978 வரை நடந்து வந்தது. இப்போது லைப்ரரி இல்லை. 'ரீகல்' என்கிற பெயரில் சினிமா தியேட்டராகி, பகல் பொழுதுகளில் மட்டும் கல்யாணம், மற்றும் கருத்தரங்குகளுக்கு அனுமதிக்கப்படுகிறது.

## ஜில்லென்று ஜிகிர் தண்டா!

●● ''தமிழ்த்தாயை தெய்வமாகக் கருதிச் சிலை வைக்கப்பட்டுள்ள ஒரே நகரம் மதுரைதான்'' - என்கிறார் உள்ளூர் கல்லூரி மாணவர். எங்களூரின் சாலையோர சர்பத் போன்ற ஜிகிர்தண்டா பிரசித்தமானது. மதுரைக்கு எந்தப் பிரபலம் வந்தாலும் காரில் வந்து இறங்கி சகஜமாக ஜிகிர்தண்டா அருந்துவது வழக்கம்'' என்கிறார் இந்த மாணவர்.

## கரங்கள் இரண்டு விரல்கள் 25!

●● உள்ளூர் ஆட்டோமொபைல்ஸ் ஒன்றில் வேலை செய்கிறவர் பால்ராஜ். மருத்துவத்தின் POLY DACTYLISM எனப்படும் பகுதியில் பதிவு செய்யப்பட்டவர். அதிகபட்சமாக, மொத்தம் இவரின் விரல்கள் இருபத்தைந்து!

வட்டமேஜை

# மாப்பிள்ளைகளின் கவனத்திற்கு...

◆ ''சார்க் மாநாட்டில் ஒரு சறுக்கல்'' தலையங்கம் படித்தேன். பல ஏடுகள் பிரதமருக்கு ஒத்துப் பாட, கல்கி மட்டுமே தலைவர்கள் நாட்டிற்குப் பயன் தரும் வழிகளைக் கையாள வேண்டுமே ஒழிய, ராஜ தந்திரமற்றுச் செயல்படக் கூடாது, என்று சு(சு)ட்டிக் காட்டி, நாடு வாழ உண்மை வழியைக் கூறியுள்ளது.
நொச்சிப்பட்டி, எம். மனோகரன்.

◆ ஆண்டவன் குடி கொண்டிருக்கும் ஆலயங்களின் சுற்றுப் புறங்கள் சகிக்க முடியாமல் இருக்கின்றன. மல ஜலம் கழிக்கக்கூட நம் மக்கள் தயங்குவதில்லை. போதாக்குறைக்கு நவக்கிரகங்கள், மற்றும் ஆஞ்சநேயருக்கு அருகில் உள்ள சுவர்களில் பரிசுச் சீட்டு எண்கள், பரீட்சைக்கான பதிவு எண்கள் என, சுவர் நெடுகிலுமே ஒரே எண்களின் கோலம். இவ்வாறெல்லாம் ஆலயங்களை அசிங்கப்படுத்தலாமா? மசூதி, சர்ச் போன்ற வழிபாட்டுத்தலங்களில் இவ்வாறில்லையே.
கும்பகோணம், கே.என். பாலகிருஷ்ணன்.

◆ ''குழந்தை வளர்ப்பு : அப்பாவுக்கும் பொறுப்பு!'' என்பதை அட்டைப் படத்தின் மூலமே அழகாக வெளிப்படுத்திய விதம் வெரி சூப்பர்!
மதுரை - 10, பி. ராஜசேகரன்.

◆ அப்பாவின் பொறுப்பும் பிள்ளைகளின் எதிர்கால வாழ்விற்கு உறுதுணையாக இருந்து, அவர்களின் வளர்ச்சிக்கு வழி வகுக்க வேண்டும் என்பதை உணர்த்திய கல்கியின் 'குடும்பப் பொறுப்பு' என் மனம் குளிரச் செய்து விட்டது.
ஆவடி, க. கோபி.

◆ கல்கி 17.11.91 இதழ் 14 ஆம் பக்க துணுக்கில் ''வதனமே சந்திரபிம்பமோ'' என்ற பாடலை பி.யு.சின்னப்பா பாடியிருப்பதாகக் குறிப்பிடப் பட்டுள்ளது தவறு. ''சிவகவி'' படத்தில் எம்.கே. தியாகராஜ பாகவதர் பாடியுள்ளார்.
சூலூர், வி. கிருஷ்ணசாமி.

◆ தங்களுடைய அரசியல் லாபத்திற்காகவும், சுயநலத்திற்காகவும் விளையாட்டில் கைவைக்கும் தலைவர்களால்தான் இன்று நாட்டில் பல பிரச்னைகள் உருவாகின்றன. இப்படிப்பட்ட தலைவர்கள் மக்களால் புறக்கணிக்கப்பட்டால் தான் நாடு வளம் பெறும்.
பி.பி.குளம், ம. செந்தில் நாதன்.

◆ சமீபத்தில் எங்கள் உறவினர் வீட்டில் உள்ள ஒரு பெண்ணைப் பெண் பார்ப்பதற்காக மாப்பிள்ளை வீட்டார் வருவதாக இருந்தது. ஆனால் அன்று வந்தது மாப்பிள்ளையின் தகப்பனார் மட்டும்தான்! அவர் பார்த்துவிட்டுச் சென்றபின் மற்றொரு நாள் பையனின் சகோதரி வந்து பார்த்துவிட்டுச் சென்றார்! இன்னொரு நாள் பையனின் சகோதரனும், உறவினர்களும் பார்த்து விட்டுச் சென்றபின் கடைசியாகப் பையன் வந்து பார்த்துவிட்டு, ''பிடிக்கவில்லை'' என்று சொல்லிப் போய்விட்டான். அந்தப் பெண் ஒவ்வொரு முறையும் அலங்கரித்து, நமஸ்காரம் செய்து, பலகாரங்கள் கொடுத்து வெறுத்துப் போய்விட்டாள். பெண் பார்க்க விரும்பும் இளைஞர்கள் குறைந்த பட்சம் தாங்களே பெற்றோருடன் போய்ப் பார்க்கலாமே?
திருச்சி - 8, குரு. கிருஷ்ணா.

◆ பிரமாண்டமான ஏற்பாடுகளுடன் அடுத்த ஆண்டு துவங்கும் ஒலிம்பிக் பற்றிய சுவையான செய்திகளைக் கொடுத்து, விளையாட்டு ரசிகர்களை இப்போதே சுறுசுறுப்படைய வைத்து விட்டீர்கள்!
ஈரோடு - 1, ஈ.டி. விஜயகுமார்.

◆ சைக்கிள், சைக்கிள் ரிக்ஷா, ஸ்கூட்டர், ஆட்டோ போன்ற வாகனங்கள் இரவில் விளக்கில்லாமல் வேகமாகச் செல்வதால் ஏராள விபத்துக்கள் நேர்கின்றன. இவ்விபத்துக்களைக் காவல் துறையின் கவனத்திற்குக் கொண்டு செல்ல முடிவதில்லை. ஏனெனில் மோதிய சைக்கிள் கண்டு கொள்ளாமல் ஓடி மறைந்து விடுகிறது. எனவே இருட்டில் விளக்கில்லாமல் செல்வோர் மீது காவல் துறையினர் கடுமையான நடவடிக்கை மேற்கொண்டு தண்டிக்க வேண்டும்.
சென்னை - 21, எம். வெங்கடசாமி.

◆ அமைச்சராகப் பொறுப்பேற்ற அடிக்கவடு கூடக் காய்ந்து போகாத சூழ்நிலையில், புதிய அமைச்சர் விஸ்வநாதனைப் பேட்டி கண்ட கல்கியின் சுறுசுறுப்பே அலாதிதான். சபாஷ் கல்கி!
தோட்டக்குறிச்சி, இரா. வளையாபதி.

◆ 'பெருகிவரும் நறுமணங்கள்' கட்டுரை (10.11.91) படித்தோம். 75 ஆண்டுகளாக பத்தி தொழிலில் ஈடுபட்டுள்ள எங்களுக்குக் கட்டுரை மகிழ்ச்சியளித்தது. ஒரு திருத்தம். ஊதுபத்திக்குத் தமிழக அரசு வரி 12½ சதம் என கூறியிருக்கிறீர்கள். ஆனால் ஊதுபத்திக்கு 8% ஒரு முனை வரிதான் விதித்துள்ளது.
திருச்சி - 8, ச. ரமேஷ்.

◆ ரிஷபனின் ''காணிக்கை'' சிறுகதை அருமையான குடும்பப் பாசத்தை விளக்கும் கதை. இரக்க குணம், பிறருக்கு உதவும் குணம் ஆகியவற்றை இந்தக் கதையின் மூலமாவது மற்றவர்கள் அறிந்து கொள்ளட்டும்.
கழிஞ்சூர், எஸ்.கே.எம். மோகன்.



ப்ரீதா, சங்கீதா : வசதியற்ற மைதானத்திலும் விடாமல் பயிற்சி...

# ஒலிம்பிக் போட்டிக்குத் தயாராகும் *சகோதரிகள்!*

அனைவரும் கலந்து கொள்ளக் கூடிய 1,500 மீட்டர் ஓட்டப் பந்தயம் ஒன்றை கடந்த 80-ல் ஒருமுறை நடத்தியது, மதுரை டிவிஷனல் ரயில்வே. வெறும் ஓட்டம்தானே என்று அதில் ஆர்வத்தோடு கலந்து கொண்ட பலரும் பாதி வழியிலேயே மூச்சிறைக்க நின்று போய் விட, வெகு சிலரே முழு தூரத்தையும் ஓடி முடித்தார்கள். அந்த வெகு சிலரில் ஆறு வயதுச் சிறுமி ப்ரீதாவும் ஒருத்தி.

ப்ரீதாவின் ஆர்வத்தைக் கண்ட நடுவர்கள், அவளுடைய திறமையைப் பாராட்டி, சிறப்புப் பரிசாக நாற்பது ரூபாய் அளித்தனர். அதிலிருந்து சிறுமி ப்ரீதா கலந்து கொள்ளாத தடகளப் போட்டியேதும் மதுரையில் நடந்ததேயில்லை என்று கூடச் சொல்லலாம். பிறகு ஒரு முறை, ஸ்டேட் பேங்க் ஆபீஸர்ஸ் அசோசியேஷன் நடத்திய 14-16 வயதினருக்கான ஓட்டப் பந்தயத்தில் பதினோரு வயதேயான சிறுமி ப்ரீதா கலந்து கொண்டு முதல் பரிசையே பெற்று விட்டாள்.

பிறகு, மாவட்டம், மாநிலம், தேசியம், உலகளாவிய போட்டிகள் என்று ப்ரீதாவின் ஓட்டம் தொடர ஆரம்பித்தது. பூனாவில் நடந்த உலக அளவிலான போட்டியில் ஐந்தாவது இடம், தேசிய அளவில் நடந்த கோகோவில் நான்காவது இடம், மாநில அளவில் முதலிடம் என்று மெடல்களும் கோப்பைகளும் குவிய ஆரம்பித்தன.

இப்போது +2 படிக்கும் ப்ரீதாவோடு, ஒன்பதாவது படிக்கும் தங்கை சங்கீதாவும் அக்காவுக்குப் போட்டியாக ஓடிக் கொண்டிருக்கிறாள். இருவருக்கும் மூத்தவரான மருத்துவக் கல்லூரி மாணவி கவிதாவும் ஓட்டப் பந்தய வீராங்கனைதான்! ரயில்வேயில் வேலை பார்க்கும் அப்பா ராமசாமியும் ஓர் ஓட்டப்பந்தய வீரராக இருந்தவர் தாம்!

ப்ரீதாவையும் சங்கீதாவையும் மதுரையிலுள்ள அவர்களது இல்லத்தில் சந்தித்த போது, ''இதுவரை எத்தனை போட்டிகளில் கலந்து கொண்டோம் என்று எங்களுக்கே நினைவில்லை'' என்றார்கள்.

கிராமத்து வீடுகளில் தங்களுக்கு வரும் தபால்களையும் வீட்டு வரி ரசீதுகளையும் ஏதோவொரு மூலையில் தொங்கவிடப் பட்டிருக்கும் இரும்புக் கொக்கியில் அலட்சியமாகச் செருகி வைத்திருப்பார்களே, அது போல் இவர்கள் வீட்டு முன்னறை மூலையொன்றில் ஏகப்பட்ட மெடல்கள் அலட்சியமாகத் தொங்க விடப்பட்டிருந்

# அடுத்த இதழில்...

●● விலை கொடுத்து வாங்கும் ஆபத்துகள்!

- சிறப்புக் கட்டுரை

[redacted]

தன. மறுபுறம் தேவையில்லாத பாத்திரங்களைப் பரணில் கட்டிப் போட்டிருக்கிற மாதிரி பரிசுக் கோப்பைகள் கிடந்தன.

''இவை எல்லாமே நீங்கள் இருவரும் வாங்கியவைதானா?'' நமது சந்தேகம் தீரவில்லை. ''வீட்டுக்குள் ஆங்காங்கே தேடிப் பார்த்தால், இன்னும் கூடக் கிடைக்கும்'' என்றாள் சிறுமி சங்கீதா. ''நாங்கள் இன்னும் சிறுமிகளாக இருந்த போது வாங்கிய பல மெடல்களை வைத்துப் பல்வேறு விளையாட்டுக்களை விளையாடுவோம். அப்படி விளையாடித் தொலைத்தவைதான் அதிகம்!'' இது ப்ரீதா.

இவர்களின் ஒரே லட்சியம் ஒலிம்பிக்கில் கலந்து கொள்வதுதான். இவர்களது தந்தைக்கும் அதே லட்சியம்தான். இருப்பினும் ஒலிம்பிக்கில் கலந்து கொள்வதற்கான தகுதிகளைத் தமது பெண்களால் பெற முடியும் என்று நம்பும் தந்தைக்கு, நடைமுறைப் பிரச்னைகளும் தெளிவாகப் புரிந்திருக்கிறது.

''மதுரையில் இவர்களுக்குப் பயிற்சியளிப்பதற்கான ட்ராக் வசதி கூட சரியான படி இல்லை. உலகளாவிய அளவில் ஓட்டப் பந்தயங்களுக்கான பயிற்சி முறைகளும் விஞ்ஞான முறையில் முன்னேறியிருக்கின்றன. அவற்றைத் தெரிந்த கோச்சுகள் இல்லை. இதற்கெல்லாம் தேவைப்படும் பண வசதியும் இல்லை. விளையாட்டுப் போட்டிகளில் ஏற்படும் சிறு சிறு விபத்துக்களுக்கு மருத்துவம் செய்வதற்கான ஸ்போர்ட்ஸ் மெடிஸின் கூட போதுமான அளவில் கிடைப்பதில்லை. இருப்பினும் சம்பந்தப்பட்டவர்கள் கவனத்தை என்றேனும் கவர்வோம் என்ற நம்பிக்கையுடன் என் பெண்கள் மனம் தளராமல் எங்கள் காலனியைச் சுற்றியாவது தினசரி ஓடிப் பயிற்சி பெற்றுக் கொண்டு தான் இருக்கிறார்கள்'' என்கிறார் அவர்.

- சார்ல்ஸ்

# மங்கையர் மலர்

## டிசம்பர் '91

**வாஷிங் & கிளீனிங் சிறப்பிதழ்**



●● தளங்கள் பளபளக்க...

●● வாஷிங் மெஷின் வாக்வம் கிளீனர்

- கட்டுரைகள்

●● இல்லத்தரசிகளின் யோசனைகள்





☛ ஹென்ரி டிபேன்.

☛ வைகை : கள்ளழகரே பயப்படுகிறார்!

# வைகையைச் சுத்திகரிக்க முடியுமா?

சித்திரைத் திருவிழாவின் போது, வைகைக்கு வருகிற சுவாமி கள்ளழகர் கூட இப்போது ஆற்றுக்குள் இறங்காமல் மூக்கைப் பிடித்துக் கொண்டு வந்த வழியே திரும்பிப் போய்விடுகிறார். வைகையின் அசிங்கம் கடவுளையே கதிகலங்கச் செய்கிறபோது மனிதர்கள் எம்மாத்திரம்!

இந்த அளவுக்கு அசிங்கப்பட்டுப் போனதற்கு என்ன காரணம்? ''மனிதக் கழிவுகள்தான் முக்கிய காரணம்'' என்கிறார் வெறும் கூவமாகிப் போன வைகையைப் பற்றி ஆராய்ச்சி செய்த மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேராசிரியை ஆனந்தவல்லி மகாதேவன்.

''சாதாரணமாக வெளிநாடுகளிலுள்ள ஆறுகளைவிட நம்நாட்டிலுள்ள ஆறுகளுக்குத் தன்னைத் தானே சுத்திகரித்துக் கொள்ளும் தன்மை அதிகம். அப்படியிருந்தும் வைகையால் தன்னைச் சுத்திகரித்துக் கொள்ள முடியவில்லை. காரணம், வைகையில் குறைந்த பட்சத் தண்ணீர் கூட ஓடவில்லை என்பதுதான்'' என்கிறார் அவர்.

குட்டைகளைப் போலத் தேங்கிக் கிடக்கிற நீரையும் சலவைத் தொழிலாள அன்பர்கள் விட்டு வைக்காமல், துணிகளைத் துவைப்பதால் மேலும் அசிங்கமாகிறது. இப்படிப்பட்ட சாக்கடை நீர்தான் ஆகாசத்தாமரைகள் வளர்வதற்கு மிகவும் சிலாக்கியமானது என்பதால், அவை படர்ந்து படர்ந்து செழித்து நிற்கின்றன.

''இதுவே தாய்லாந்து போன்ற வெளிநாடுகளாக இருந்தால், இந்த ஆகாசத் தாமரைகளைப் பறித்துக் கொண்டு வந்து, அவற்றை மூலப் பொருளாக உபயோகித்து நாற்காலி, குஷன், பர்ஸ் போன்ற பொருள்களை உற்பத்தி செய்ய ஆரம்பித்து விடுவார்கள்'' என்கிறார் ஆனந்தவல்லி. ''அதோடு மாசுபட்டுப் போன வைகையிலிருந்து பயோகாஸ் உற்பத்தியும் செய்யலாம்'' என்கிறார் அவர்.

வைகை இப்படி மாசுபட்டுப் போனதால், வைகைக் கரையை ஒட்டியுள்ள குழாய்க் கிணறுகளில் சுத்தமான தண்ணீர் கிடைப்பதில்லை. இந்த சுகாதாரக் கேட்டின் வீச்சு நூறு அடிகளுக்கு மேலான ஆழம் கொண்ட குழாய்க் கிணறுகளைக் கூட விட்டு வைக்கவில்லை என்பதிலிருந்தே, வைகையைச் சுத்திகரிக்க வேண்டிய அவசியத்தைப் புரிந்து கொண்டுவிடலாம்.

ஆனால், எப்படிச் சுத்திகரிப்பது? ''விஞ்ஞான ரீதியான சுத்திகரிப்பு என்பது ஒரு புறமிருக்கட்டும்; முதலில் முன்பு நடந்த உலகத் தமிழ் மாநாட்டுக்காகக் கட்டப்பட்ட கழிவிடங்களில் பெரும்பாலானவை தண்ணீர் வசதியில்லாததால் உபயோக மற்றுத்தான் கிடக்கின்றன. அவற்றுக்குத் தண்ணீர் வசதி செய்து கொடுத்தாலே, காலைக் கடன்களுக்காக வைகையை நாடுவோரின் தொகை கணிசமாகக் குறையும்'' என்கிறார் மதுரை மாவட்ட நுகர்வோர் பாதுகாப்புக் குழுவின் தலைவர் ஹென்ரி டிபேன்.

- பிரின்ஸ்



☛ கல்லூரி மாணவிகளும் கற்கிறார்கள்

# கரகம் நழுவக்கூடாது; ஆபாசத்தில் விழக்கூடாது!



☛ அயல்நாட்டு டூரிஸ்டுகளுக்குக் கரகம் என்றால் குஷிதான்

**பூ**ச் செருகின கரகம் தலையில். காலில் கொத்தாய்ச் சலங்கை. உடம்பில் விதவிதமான வர்ண உடை. இதனுடன் பக்கத்தில் நாதஸ்வர, மத்தள வாத்தியங்களின் இனுசான இசை. அதற்கேற்றபடி - தலையிலிருந்து கரகம் நழுவாதபடி - சுழன்று சுழன்று ஆட்டம்.

தெருக்களின் நடுவேதான் இந்தக் கரகாட்டம். மதுரை நகரின் பல திருவிழாக்களில் கரகாட்டம் ஒரு முக்கிய விஷயம். பல குழுக்கள் - கரகத்தை நம்பி இருக்கின்றன.

**நா**ற்பத்தொன்பது வயதான வி. வேலு - தனியாகக் கரகாட்டக் குழு வைத் திருக்கிறார். 22 பேர் இருக்கிறார்கள். ஆறு வயதிலிருந்து கரகத்துடனான வாழ்க்கை. ''முன்பெல்லாம் பெண்கள் கரகத்திற்கு வருவது குறைவு. அதனால் ஆண்களே பெண் வேஷம் போட்டு ஆடுவோம். கரகம் ஆடுவதற்கு முன்பு - 15 நாள் அசைவம் சாப்பிடாமல் விரதம் இருப்போம். மூன்று நாள் கோவிலில் தொடர்ந்து ஆடுவோம். ஆற்றுக்குப் போய் கரகச் செம்பில் மண்ணை அள்ளி மாலை சுற்றி எடுத்து வருவோம். இரவு பத்து மணியிலிருந்து காலை ஐந்து மணி வரை ஆடினாலும் தலையிலுள்ள கரகத்தைக் கீழே இறக்க மாட்டோம். பழைய மெட்டுகளுக்கு மட்டுமே ஆடுவோம்.''

''இப்போது திருவிழாக்களில் ஆடினாலும் - கரகாட்டம் ஆபாசமானதாக மாறி விட்டிருக்கிறதே?''

''உண்மைதான். இப்போது பல குழுக்கள் வந்து விட்டன. பத்து வருஷங்களில் பல பெண்கள் வந்து விட்டார்கள். ரசனையும் மாறி விட்டிருக்கிறது. பாரம்பரிய மெட்டுகளுக்கு ஆடின கரகத்தை, இப்போது சினிமா மெட்டுகளுக்காக ஆடுகிறார்கள். நானும் ஆடுகிறேன். ஆனால் நான் ஆபாசமாக ஆடுவதில்லை'' என்கிறார்.

**க**ரகத்தில் இப்போது சர்க்கஸின் குணங்களும் புகுந்து விட்டன. சாகசத்துடன் ஏணியைத் தெருவில் நிறுத்தி, அதில் ஏறுகிறார்கள். ஒருவரைப் படுக்க வைத்துக் கரகம் சுமந்தபடியே கண்ணைக் கட்டி பூசணி, சுரைக்காய் வெட்டுகிறார்கள். மண்ணில் தையல் ஊசியைக் குத்திக் கரகத்துடன் குனிந்து கண்ணில் ஊசியை எடுக்கிறார்கள். வாயில் தீக்கொழுந்து விடுகிறார்கள். தீ வளையத்தினுள் பாய்கிறார்கள்.

**சி**ந்துபைரவி, ஆரபி, செஞ்சுருட்டி என்று பல ராகங்களுக்கேற்றபடியான கரகாட்டம்தான் இப்போது எவ்வளவு மாறிப் போய் விட்டது? என்றாலும், 'புராதனக் கலை பாதுகாக்கப்பட வேண்டும்' என்ற கருத்தில் பல கல்லூரி மாணவர்கள் இதைக் கற்றுக் கொள்ளவும் ஆய்வு நடத்தவும் முன் வருவது அதன் தூய்மை காப்பாற்றப் படவும் உதவும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்துகிறது.

- திருபர்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 150/- விமானத் தபால்; ரூ. 350/-.

# உங்கள் ஃபர்னிச்சரை பாலிஷ் செய்யும் நேரமா –

# அதை டச்வுட் செய்யுங்கள்.



ஃபர்னிச்சருக்கு பேசத் தெரியாது. அதனால் என்ன ? ஒரு முறை பார்த்தாலே, எதற்கு பாலிஷ் அவசியம் எதற்கு தேவையில்லை என்பது புரிந்துவிடும். மேலும் அழகான ஃபர்னிச்சர் உயிரற்றுக் கிடந்தால், அதன் மதிப்புதான் என்ன ? அதனால் அடுத்த முறை உங்கள் இல்லத்தை பெயிண்ட் செய்யும்போது ஃபர்னிச்சருக்கும் அவசியம் பாலிஷ் செய்யுங்கள் - டச்வுட் உபயோகித்து.

டச்வுட் உபயோகிப்பது மிகவும் எளிதானது. இதற்காக ஒரு பாலிஷ் செய்பவரை அழைக்கத் தேவையில்லை. உங்கள் பெயிண்டரே இதை பிரஷ்ஷினால் பூச முடியும்.

தெரியுமா ? டச்வுட் பூசப்பட்ட ஃபர்னிச்சர் பல வருடங்களுக்கு புதியதுபோல் பொலிவுடன் இருக்கும்! ஏனென்றால் டச்வுட்-ல் பாலியூரிதேன் உள்ளது. அது ஃபர்னிச்சரை வலுவடையச் செய்வதுடன், கறைகள், புள்ளி-கள் மற்றும் கீறல்களிலிருந்து பாதுகாக்கிறது. அதனால் ஃபர்னிச்சர் மீது சூடான தேநீர் விழுந்-தாலோ அல்லது ஃபேனர் வாள் உராய்ந்-தாலோ, நீங்கள் கவலைப்பட வேண்டாம். டச்வுட் க்ளாஸி ஃபினிஷின் பளபளப்பு எங்கிருந்தாலும் அறிய முடியும். ஆனால் நீங்கள் பளபளக்கும் ஃபினிஷை விரும்பா-விட்டால் உபயோகியுங்கள் டச்வுட் மேட் ஃபினிஷ். இனி டச்வுட் உங்களுடையது. நீங்கள் விரும்பினால் மேட் மற்றும் க்ளாஸி ஃபினிஷ்களை கலந்து உங்களுக்கு பிடித்த அளவு பளபளப்பை ஃபர்னிச்சரில் உண்டாக்கலாம். அதனால் ஃபர்னிச்சரின் தேவையை உணர்ந்து இப்பொழுதே அதன் நன்மைக்காக கொண்டு வாருங்கள் டச்வுட்.




ஃபர்னிச்சருக்கு புத்துயிர் ஊட்டிடும், எழிலுடன்

தயவு செய்து, டச்வுட் இன் பல ஆண்டு காலம் நிலவும் அழகினைப் பற்றிய இலவச சிறு புத்தகத்தை அனுப்பவும். K6

பெயர் ____________________

____________________

முகவரி ____________________

____________________

____________________

டச்வுட் இன் முகவரி: ஏஷியன் பெயின்ட்ஸ்
டச்வுட் பிரிவு, த.பெ. எண் 11701, பம்பாய்-400 021.



REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka